திருவள்ளுவநாயனார் திருவடி துணை.

# திருக்குறள் அதிகார சொரூப சூசகமும்,

குறளுதாரணமுங் - கருத்துரையுஞ்சேர்ந்த

ஆத்திசூடி - கொன்றைவேந்தன்

மூலமும்-உரையும்.

இவை

திருமயிலையி லர்ச்சாவதாரமா யெழுந்தருளிய

## திருவள்ளுவநாயனார்

சந்நிதி கயிங்கரிய அத்யேச சபையாராகிய

மெய்யூர்-அப்பாவுமுதலியார் குமாரர்

குருசாமிமுதலியார் முதலானவர்கள் கருதியபடி

யச்சல்புத்தலைவர்

சிந்தாத்திரிப்பேட்டையிலிருக்கும்,

அனுககாவூர் - தாண்டவராயமுதலியார்

குமாரர்

**கந்தசாமிமுதலியாராலும்,**

ஷை குறளதிகார சொரூப சூசகமியற்றிய

திருவல்லிக்கேணி

**வரதப்பமுதலியாராலும்**

புரசை-அஷ்டாவதான

**சபாபதிமுதலியார்**

முன்னிலையிற பரிசோதித்து,

சிந்தாதிரிப்பேட்டையிலிருக்கும்
ச—முனிசாமி முதலியாரது
மெய்ஞ்ஞான சூரியோதய விலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டன

சென்னை,
உருத்திரோற்காரி௵ கார்த்திகை௴.

REGISTERED 1863.



திருவள்ளுவநாயனார் துணை.
முருகன் சரணம்.

## சிறப்புப்பாயிரம்.

## நேரிசை ஆசிரியப்பா.

நிலைபெறமர்த்தமிய நெட்டிருச்சராசரம் *
உலைவரும்பயோததி-யுட்பியில்சிலீமுகம் *
ஐஞ்ஞூற்றிரட்டி-யணித்தலைச்சிஞ்சினி *
பைஞ்ஞினிறக்கடல-வத்திரநெடுந்தேர் *
தண்மையும்வெம்மையுந்-தாவருத்திகிரி *
வெண்ணருமேட்டி-லெழுதாப்புரவி *
மன்னுயிரனைத்தும்-வகுக்கும்பாகன் *
இன்னதம்பர னிரண்டுதலையிட்ட *
வோரெயிலவெய்கா-லுடனுறவிருந்தும் *
போ ரமைவிலவாய்ப்-பொலிந்தனபோல *
மற்றையதீதினூல்-வாளாவிருப்பத் *
தெற்றெனயாவருந்-தெள்ளிதினுணரவுங் *
குளமெனவினிமைமுற்-கூர்த்துளநூல்களுங் *
களமிகுகாஞ்சிரக்-கனியெனவெறுப்பவும் *
எப்பெருஞ்சமயமு-மிவற்றின்கருத்தெலாம் *
ஒப்பாமெமதெனு-வுரைத்தனவியப்பவும் *
அறமுதற்பொருளெலா மளப்பில்தத்துவத் *
திறன்முழுதுந்தனித்-தெரிவருங்குடிலையி *
னுள்ளடங்கப்பெறூஉ-முளவெனவமைதரு *
மாண்பினுற்புலவர் வழுத்தருசொற்சுவை *
எண்பயில்பொருட்சுவை-யிவற்றினுமுள்ள *
தரிதரிதெனுநனி-நலங்களிசிறப்பவும் *
பெரிதெனச்சான்றோர்-பெட்புறுகல்வியென் *
றளவறுமாளிகைக்-கடிப்படைபோன்மென *
றிளைஞருமுதியரு-மெளிதினிற்கற்பவு *

நேரிசை ஆசிரியப்பா.

மூவெழுத்துருவா முன்னவன்பூசனைக் ❋
காவலினன்புகூர்-ஔவையார்பணித்தருள் ❋
ஆத்திசூடி-யரும்பொருணிறைவுறக் ❋
கொத்துளவுலகியற்-கொன்றைவேந்தன் ❋
இருவகைநூறகுமுன் னெழில்வளர்தணிகைச் ❋
சரவணப்பெருமா ளெனுந்தமிழறிஞன் ❋
செய்தவுரைகருத்-திருத்தகவிணங்க ❋
மெய்தருமூவருள்-மெய்தருமொருவர் ❋
நம்புமின்னருளால்-நாயனாராய்த்திகர் ❋
தம்பெயாதிறீஇப்பைத்-தளிர்துதைபல்கிளை ❋
சேணிடைநிழற்று-மாணுயராலமர் ❋
நுண்ணியவிதையென-நோன்மைசான்மன்பதை ❋
எண்ணியயாவும இசைவுறக்குறள்வெண் ❋
பாவிற்செறித்துப்-பகர்பெருநூலின் ❋
மேவிக்கிடந்தன-வியன்பொருளனைத்தைக் ❋
கேற்பனமேறகோ-ளியையச்சேர்த்திப் ❋
பாறபட நன்கு-பதித்தவற்றுல்வரும ❋
ஊதியங்கொடுமுன்-னுயர்விசேடத்ததாய்ப் ❋
போதமெய்ஞ்ஞான-போனகர்கருணையின் ❋
அங்கம்பூம்பாவை-யாயவதரிப்பத் ❋
திங்கள்வேணியற்-சித்தித்துமட்டிட்ட ❋
புன்னையங்கான-லெண்ணுநறபதிக ❋
மணங்கமழ்பதியாய்-வாயிலார்நாயனார் ❋
இணங்குறுமனகோ-யிலிற்பரசிவத்தை ❋
யிருத்தியாநந்த-மெனுநீராட்டி ❋

டருத்தியிற்பேரறி-வாஞ்சுடரோறறி *
யன்பமுதருத்தி-யருச்சித்திறிலா *
விண்புறுமிடனதா-யிமவலாச்செல்வி *
மயிலாய்ப்புன்னை-மரனிழலமர்த்த *
புயல்போன்மிடற்றுப்-புநிதனையிறைஞ்சும் *
வளத்ததாயுள்ள-மயிலாபுரியிற் *
னொப்பருமில்லறக்-கேண்மையின்வழாஅப் *
பாக்கியநிட்டா பாராயிருத்து *
போகருவரவிலாப்-பூரணவொளியாய் *
மாநகருட்புகழ்த்திரு வள்ளுவநாயனா *

## நேரிசை ஆசிரியப்பா.

சீர்த்துறைகோபுர விமானக்கோயிற் *
திருப்பணிநிறைவுறச்-செய்கெனத்தொண்டா *
விருப்புறுபத்திமை-வியனெறிகைவிடா *

ஆயவரு திருமயி-லைத்திருவள்ளுவ *
நாயனார்சந்நிதி நற்கயிங்கரிய *
உத்தேசசபையா-ருரைத்தனராக *
வெத்தேயமும்பரந்-தேத்துறுந்திருக்குற *
ளதனிற்பொதித்துள-வதிகாரங்களை *

யிதழூற்றிடவாய்த் தொடுத்தமுறையே *
யொழுங்வகையவ்வுரை-யுடனெருங்குணரச் *
சொலுமதிகார-சொரூபஞ்சகமென *
நலனுயாபெயர்புனைஇ தல்கியவேளான் *
குலமெனும்பொன்னிடைக்-குயிற்றியமாடணி *
நீணிலையல்லிக-கேணிவாழ்நறகுண *
நிறைவரதப்ப-நேயனுதவியால் *
அறைதருமச்சலைக்-கதிபனெஞ்ஞான்றும் *
அன்பரைப்போற்ற-லவர்பதப்பணித *

லன்பர்தம்பூசனை யடைவுறவுஞற்றல் *
வித்தகமெய்ம்மை-வேதாகமநெறி *

நித்தமுமோம்பல் நெய்மபொருளெனக்கொளுந்
கங்கைமரபெனக கழறும்வலம்புரிச் *
சங்கமீன்ற தண்மணியனையான் *
அவிழ்தருமதுமல ரனிமுரல்பொழில்புடை *
தவழ்அனுககாவூர்த்-தாணடவராயவேள் *
தந்தமாதவந்-தனில்வருதநயன் *
கந்தசாமிமால்-கனிவுறவியற்றி *
மணிநீ॥ட்புவியில்-வழங்க *
அணிநீடச்சி-லமைத்தளித்தனனே. *



இஃது
வித்வான்-காஞ்சீபுரம்
சபாபதிமுதலியாரவர்கள் - மாணாக்கர்
• புரலசை-அஷ்டாவதாந
சபாபதிமுதலியாரியற்றியது.

நிலைபெறுகின்ற நீண்ட பொன்னுருவாகிய வில்லும்,கே
டில்லாத பாற்கடலிடத்தே கண்வளர்கின்ற அம்பும், ஆயிரம்
அழகுள்ள தலைகளையுடைய நாணியும், நீலநிறமுள்ள கடலாகி
ய ஆடைசூழ்ந்த நெடியதேரும், குளிர்ச்சியையும், வெப்பத்
தையும், தரும்படி யுதிக்கின்ற உருளைகளும், அளவற்ற எட்டி
லெழுதப்படாத குதிரைகளும், நிலையான எல்லாவுயிர்களையும்
படைக்கநின்ற தேர்ப்பாகனும், இவைபோல்வன பிறவும்,
பரமசிவம் முப்புரங்களை யெரிக்கும்போது ஒருசேரவிருந்து
ம், போரில்அவைநிறைவில்லனவாய்விளங்கினபோல பிற நீதி
நூல்கள் வறிதேயிராநிற்ப எவ்வகைப் பட்டோரும் ஒப்புமை
கருதித் தெளிவாகவுணரும் படியாகவும், முன் வெல்லத்தைப்
போல மதுரமிகுந்திருந்த நூல்களும் குறைமிக்க எட்டிப்பழ
த்தைப்போல வெறுக்கும்படியாகவும் எவ்வகைப்பட்டபெரி
யசமயத்தோரும் இந்நூல்களின் கருத்தெல்லாம் எமதகொப்
பாமென்றுசொல்லி அதிசயிக்கும்படியாகவும், அளவில்லாத
தத்துவப்பகுதிகள்முழுதும் ஒப்பற்றதாகிய அறிதற்கரிய கு
டிலையுள்ளடங்கப்பெற்ற உளவு போல் அறமுதலிய எல்லாப்
பொருள்களுஞ் சிறியவாகிய பாக்களில் அமைவுற்ற மாட்சிமை
யால் கற்றுவல்லவர்கள் வழுவில்லாதசொற்சுவையும்மேன்மை
நீங்காத பொருட்சுவையும் இதுகளினும் உள்ளதொருநூல் இ
டையாது கிடையாதென்று மிகவுந் தம்முள்ளத்துள் களிப்ப
டையும் படியாகவும், அறிவுடையோர் பெரிய பொருளென்
று விரும்புகின்ற கல்வி யென்னும் அளவற்ற மாணிக்கக்கு இ
வைபடிப்படையாமென்று சிறியோரும்பெரியோரும் வருத்
தமின்றிக் கற்கும்படியாகவும் பிரணவ வடிவாகிய மூத்த பிள்
ளையாரைப் பூசிக்குந் திருத்தொண்டி னிடத்து ஆவலோடும

அன்புநிறைகின்ற ஔவையார்சொல்லியருளிய ஆத்திசூடியும் அருமையாகிய பொருள்க ணிறைய உயிர்முதலிய வருக்கங்க ளிற் கோவைசெய்துள்ள உலகவொழுகத்தைச் சொல்லுகின் ற கொன்றைவேந்தனும், ஆகிய இரண்டு நூல்களுக்கும மூன் னர் அழகுமிகுகின்ற திருத்தணிகையிலிருக்கும் சரவணப்பெ ருமாள் என்னும் இயற பெயரினையுடைய தமிழ் வல்லோன் செய்திருந்த உரைக்குச் செம்மையாக இணங்குமபடி. உண் மைப்பொருளைத்தருகின்ற மூத்தேவருள் படைப்புத்தொழி ல் செய்யும் கடவுள் யாவரும் நம்புதற்குக் காரணமாகிய தம து நல்லவருளினால் திருவள்ளுவரா யவதரித்துத் தனக்குத்தா னே நிகர்த்த திருவள்ளுவனென்னுந் தமதுபெயரைத் தரித்து ப் பசுமையாகிய தளிர்கள்நிறைந்த பலகிளைகளால் நெடுத்து ரத்தில் நிழலைச்செய்கின்ற பெரிதாகிய ஆலமரம் அடங்கியிரு க்கின்ற மிகச்சிறிய வித்தென்னும்படி. வலிமைமிக்க உலகத்தா ர் எண்ணிய கருத்து முற்றும் விளங்குமாறு குறள் வெண்பா வி லடக்கிச்சொல்லிய பெரியநூலினிடத்தே பொருந்தியுள்ள னவாகிய இன்றியமையாத பொருள்களுள் அவ்வவ் விடங்கட் கு ஏற்பனவற்றை உதாரணங்களாக [illegible]யைச் சேர்த்து நன்று க அச்சுப்பதித்து அதுகளா லுண்டாகும் இலாபத்தைக் கொ ண்டு மூர்த்தி தலம் தீர்த்தமென்னும் மூவகைச் சிறப்புடைய தாகியும் சிவஞானப் பாலுண்ட சம்பந்தசுவாமிகள் நமதரு ளால் என்புபூம்பாவையா யுதிக்கும்படி. பரமசிவத்தைத் தியா னித்து மட்டிட்ட புன்னையங் கானலென்று பாடியருளியதிரு ப்பதிகமாகிய திவ்ய மணம் பரிமளிக்கா நின்றதாகியும், வாயி லார் நாயினர் பரமசிவத்தை ஒருமைப்பட்ட மனக்கோயிலு ளிருத்தி ஆநந்த நீராலபிஷேகித்துஅறிவாகிய தீபமேற்றி அன் பாகிய அமுதுநிவேதித்துப் பூசைசெய்து முடிவிலாத முத்தி யடைந்ததாகியும் பார்வதியார மயிலாகி புன்னைமர நீழலில்

மேகம்போலுங் காளகண்டத்தையுடைய கபாலீசனைப் பூசை செய்த தலமாகியு மிருக்கின்ற மயிலாபுரியில் சொல்லுதற் கரிய இல்லறநெறியினின்றுந் வழாத செல்வமுள்ள சிவநிஷ்டாபர ராயிருந்து போக்குவரவற்ற பூரணப்பிரகாசமாகி நீக்கப்படாத பாட்டும் உரையுமாகிய கீர்த்தியை யுள்ள திருவள்ளுவ நாயனார் வீற்றிருந்தருளுகின்ற கோபுர விமானங்கள் ஓங்கி யிருக்கும் கோயில் திருப்பணியினை நிறைவுபெறச் செய்வரென்று

## சிறப்புப்பாயிரம்.

அடியார்கள் விரும்புகின்ற பெரிய பத்திமார்க்கத்தை விட்டு நீங்காதவர்களாகிய எல்லாவுயிர்களுக்கும், தாய் போன்ற கபாலீசா - கோயில்கொண்டருளும் திருமயிலைத் திருவள்ளுவ நாயனார் சந்நிதி கயிங்கரிய உத்தேச சபையா ரென்னும் பெயர் கொண்ட சிவதரும பரிபாலகர் சொல்ல எந்தத்தேயத்திலுள்ளோரும் பரிவுடனெடுத்துப் புகழ்கின்ற திருக்குறளி லுள்ள அதிகாரங்களை நன்றாயாராய்ந்து தொகுத்து வரிசையாயிய லும்படி அதனதனுரையுடனே ஒருமிக்க உளருமாறு அதிகார சொரூப சூசகமென்று நன்மைபொருந்திய பெயரிடடுச்செய்துதந்த வேளாண்குலமென்னும்பொன்னினிடத்தே பதித்த பெருமையுள்ள மணியை யொத்த தேமை யாகிய நிலைமை வாய்ந்த திருவல்லிக் கேணியில் வாழ்கின்ற நற்குணங்களால் நிறைந்திருக்கின்ற வரதப்பன் என்னும் பெயருள்ளநேயனது உதவியால், முன்னேசொல்லப்பட்ட நாயனார் சந்நிதிகயிங்கரியோத்தேச சபைக்கு முதல்வனும் எக்காலத்தும் அடியார்களைப்போற்றுதலும் அவரது பாதங்களைப்பணிதலும் அவரது

பூசையை முறையாகச செய்தலும் எல்லா வற்றிற்குங் காரண மாகிய மெய்ப்பொருளைக கூறுகின்ற அழிவில்லாத வேதாகம நெறியைக கடைப்பிடித்தலுமாகிய இவ்வொழுக்கங்களேதன க்குப் பெரும்பயனெனக கொண்டிருப்பவனும், கங்கை மர பென்று சொல்லும் வலம்புரிச்சங்கம் பெற்ற குளிர்ச்சியுள்ள முத்தினைநிகராத்தவனும் விரிகின்ற தேனையுடைய மலர்களி னிடத்தே வண்டுகள் முரலுகின்ற சோலைகள்பக்கங்களிற் சூழ்ந்திருக்கின்ற அனுககாபுரி விருக்கும் தாண்டவ ராய னென்னும் வேளாளன் செய்த பெருமைபொருந்திய தவத்தினலுதித்த புத்திரனுமாகிய கந்தசாமி யென்னும் மாலானவன் இனிமை புண்டாகச்செய்து கருமையாகிய கடல்சூழ்ந்த பூமியில் வழங்கும்படி அழகு பெருகு கின்ற அச்சிற பதிப்பித்துத் தந்தன னென்க

சிறப்புப்பாயிரம் - முற்றிற்று.

உ

சிவமயம்.

---

திருவள்ளுவநாயனார்

# இரட்டைமணிமாலை.

காப்பு

உலகுபுகழ்மயிலைபுத்தமனையுன் .. . *
குலவுதியிரவினைகளொடபிற்-பலவா ... ...*
வருகோட்டியானைவறவதித்தகாகரு .. *
மொருகோட்டியானையுவத்த . ... . *

நால்வர் துதி.

மாவாரமுத்தியசங்கோலிபிக்கடல்வையகத்திற் *
மீசாவாரமுத்தியணிவேணியாடி-சூடியுய்யத் . ... .. *
தேவாரமுத்திருவாசகமுந்தத்தசெல்வர்பத ... *
நாவாரமுத்தித்துதிப்போடபிறவிநவையறவே . *

நூல்

அன்பராய்வாழ்வோமகமேபமராவே .. .. . *
நல்பராய்வாழ்த்துஞ்சோத்தண்மயிலை-யின்பார் .. *
திருவள்ளுவரொன்னதிணைபார்வணங்கு ... *
மொ ுவள்ளலாபாதமுள்ளு ... ... . . . (க)

உள்ளதிருக்கும் படித்திருவள்ளுவ ரொன்பாதனைத், க ளாதகிருக்கும பவமுமகலுங் குறியறிபாக், கள்ளத்திருக் ரு முணரானருளும் வருங்கடனீர்த, துள்ளத்திருகரு வினைய லாதொன்மயிலைகணினறே . .. ... (உ)

நினறைதில்லாததில்லையிவ்விலவையெனன .. ... *
மொன்றமனைனேயுணர்த்தின்னே-நன்றி *
வருமயிலைநண்ணுதிருவள்ளுவனைப்போற்றி . *
லருளமயிலைநம்பவநீககல். ... ... (ங)

கற்றுமனைக்களுமும் மொழிவின்றிக் கடைநத்தம், பொற்றுமனைகசழங் போற்றத்திருவள் ளுவர்க்கடிமை, பெற் றுமனைகட் புனல்போற்பெரும்புவிப்பாசத்தினிற், பற்றும னைக்கட் செவியுடையான்மயிலைப்பதிகக்க ... ... (ச)

கையார்க்குதவத்தகையார்திருவள்ளூர்கரிசு, லையார்
வருநல்லவைபாரானருணமலை ஞானலவிது, வதயாரடியல்சித்தை
யாரமயிலைத்தலத்தினரி, மையார்புகழ்மலி மையாராளநதுவழு
த்துவரோ. ... ... .. . (௰)

வழுக்குடலோம்பிமகிழாவிராமல் .. .. .. *
விழுத்தகைமையார்மயிலைமேவிப்-பழிச்சுதருக *
ணடைவருநன்மைபருளெத்தை திருவள்ளுவரை *
வேண்டவருநன்மைநெஞ்சமே. . . . (௰௧)

நெஞ்சிற்கருதுவனபிறராலறியாதிலைபென்- றஞ்சொ
ற்பனுவலுவன்றநுபின்னிடவாங்குலகோர்-தஞ்சிரத்தருள்ளுவ
வெல்லாமளந்ததை சாய்புகொண்ட, செஞ்சொற்றிருவள்ளு
வர்மென்மைகொப்பரிதேயனதே .. .. ... .. (௰௨)

தேங்கமழும்பூங்கமலச்செல்வமனென்பதே தனிவா
மாங்கவனுமுவலதுமன் றவிறித்-தாங்கெவர்க்கு *
தனாவநதமுப்பானவின்றதிருவள்ளுவர்தா . *
மென்றவநகவோருருவமீங்கு (௰௩)

நவரேனெனவுல கோர்கருத்தவிருதலேசெய்தவே,
மூன்றோர் பகுதியின் முன்செய்தருளித் தம்முன்னொருவர்,
போன் "றார்ந்திருத்தமவள்ளன்மைநோக்கிப்புவிசெய்வதா,
வான்றுப்புகழ்கதிருவள்ளுவர்கசென்னைம்பாதனதே (௰௪)

மா றதிகொற்றதனுமாலயானையன்னரு .. . . *
மீறடையாகளெனமகிழே ருறடைப்பூ... ...*
மெய்பூகமார்மயிலைமேவுதிருவள்ளுவரை . ...*
பெரபூதிருசசெஞ்சேயெனனு ... .. (௰௫)

எனனருமை பாவப்பிறவியிலாழ்ந்தங்கிளைத் துளதிந்,
ட ரை றபாதபடிநீரிறைஞ்சுமின்பூம்பொழிலித், றன்னரு
ரபா மயிலைத்திருவள்ளுவர்தத்துவமெய, வனனருட்பால்வந்
து மெய்ஞ்ஞானதவகுவர்வாய்மையிதே . .. (௰௬)

வாயிலாமொனையாள்வள்ளலார்தந்தையொடு ...*
தாயிலார்ப்போற்றியுறைதணமயிலை-மேயதிரு...*
வள்ளுவநாயனாவனபுகழைப்பேசநா .. . *
முள்ளுவநாளுமுறுமை ... ... . (௰௭)

நாவங்கம்பானையுறப்பாடுமின்பனைநாதனருட், பா
வங்கம்பாவையதாஞானசமபந்தாசொலபதிசெய்மேவங்கம்பா

ர்கருமயிலைத்திருவள்ளுவாவியனுணை, மாவங்கமெபாவப்பிறவிக
கடற்கிறதமாறிலக்கே .. . . (௰அ)

தேனர்ந்தைபூம்பொழிலுஞ்செல்விமனையார்களனும்
வானந்திகழுமயிலையாய-யானைப்புத் .. *
நாயனுமொன றனையாசசார்ந்ததிருவள்ளுவரா . *
நாயனுமொன் றமுறைநாடு . (௰௯)

நாமெம்பாளை வெலவெற்றியுங்கல்வியுநற்பொருளுமீ, கூடுமெபாவு மெய்ஞ்ஞான மூ யி ன தவல பத்தி-னீமெபாவை தொழு மயிலைதலைம்நயாமன் று, ளாமெபாமனையோர்திருவள்ளுவரன்பினாகவே , .. .. ... ... ... ... (௨௰)

திருச்சிற்றம்பலம்.

இஃது புரசை - வேஙகடாசலமுதலியார - சகோதரராகிய
அட்டாவதானம்- சபாபதிமுதலியாரவாகளியற்றியது



௨

சிவமயம்

# நாயனார்சொருபஸ்துதி.



ஆசிரியவிருத்தம்

திருமுடியிசைவார் மயிர்முடியழகுந்- . - *
திர்கபுண்டரதலமழகும் . ... . . *

திரண்மணிபுயத்தை வருஞ்செவிடழகுந் .. . *
திகழ்ந்தெடுரதாடியினழகும . *

தினையளவுபோதாச் சிறுபுன்னீர் நீண்ட
பனையளவுகாட்டும் படித்தால் - மனையளகு
வள்ளைக்குறங்கும் வளநாட வள்ளுவனார்
வெள்ளைக்குறட்பா விரி (ரு)

(பரணர்)

மாலுங்குறளாய் வளர்ந்திரண்டு மாணடியான்
ஞாலமுழுது நயந்தளந்தான்-வாலறிவின்



வள்ளுவருந்தங்குறள்வெண் பாவடியால் வையத்தா
ருள்ளுவவெல் லாமளந்தா ரோர்ந்து (சா)

(நக்கீரர்)

தானேமுழுதுணர்ந்து தண்டமிழின் வெண்குறளா
லானவறமுதலா வந்நான்கு-மேனோருக்
கூழினுரைத்தாற்கு மொண்ணீர்முகிலுக்கும்
வாழியுல கென்னாற்று மற்று (எ)

(மாமூலனார்)

அறம்பொருளின்பம்வீ டெனு மந்நான்கின்
றிறந்தெரிந்துசெப்பிய தேவை - மறந்தேயும்
வள்ளுவனென்பானோர்பேதையவன்வாய்ச்சொற்
கொள்ளா ரறிவுடை யார் (அ)

(கல்லாடர்)

ஒன்றேபொருளென்னின் வேறென்பவேறெனின்
னன்றென்பவா றுசமயத்தார் - நன்றென்ன
வெப்பாலவரு மியைபவே வள்ளுவனார்
முப்பான் மொழிந்த மொழி (கூ)

(சித்தலைச்சாத்தனார்)

காமத்தின்பக்கமொருதலைக்கைக்கிளைமற் ... *
றேமத்திணைமுதல் [illegible] ... (௭)
([illegible]னார்.)

ஐயாறுநூறு மதிகாரமூன்றுமா ... *
மெய்ப்பாலவேதப்பொருள்விளங்கப்பொய்யாது... *
தந்தானுலகிற்குத்தான்வள்ளுவனாகி... ... ... *
யந்தாமரைமேலயன்... ... ... (௮)

(மதுரைத்தமிழ்நாகனார்.)

எல்லாப்பொருளு மிதன்பாலுளவிதன்பா... ... *
லில்லாதவெப்பொருளுமில்லையால்- சொல்லாற்... ...*
பரந்தபாவாலென் பயன்வள்ளுவனார் ... ... *
சுரந்தபாவையத் துணை .. ... ... (௯)

(பாரதம்பாடியபெருந்தேவனார்.)

எப்பொருளும்யாரு மியல்பினறிவுறச்... ... *
செப்பியவள்ளுவர்தாஞ்செப்பவரு-முப்பாற்குப் ... *
பாரதஞ்சீராம கதைமனுப் பண்டைமறை... ... *
நேர்வனமற்றில்லைநிகர் ... ... ... (௧௰)

(உருத்திரசன்மகண்ணனார்)

மணற் கிளைக்கநீரூறு மைந்தர்கள் வாய்வைத் ... ... *
துணச்சுரக்குந்தாய்முலைபொன்பால்-பிணக்கிலா... *
வாய்மொழிவள்ளுவர்முப் பான்மதிப்புலவோர்க்... *
காய்தோறுமூறுமறிவு... ... .. (௧௧)

(பெருஞ்சித்திரனார்.)

ஏதமில்வள்ளுவரின்குறள்வெண்பாவினு .. ... *
லோதியவொண்பொருளெல்லா-மோதத்தனாற் ... *
றூதவிழ்தார்மாற தமேதமைப்பயத்த... ... *
வேதமேமேதக்கன ... ... ... ... (௧௨)

(நரிவெரூஉத்தலையார்.)

அறமுப்பத்தெட்டுப்பொருளெழுபதின்மூன் . *
றிறமிருபத்தைந்தாற்றெளிய-முறைமையால் . *
வேதவிழுப்பொருளை வெண்குறளால்வள்ளுவனா .. *
ரோதவழுக்கற்றதுலகு .. (௩௭)

(கோவூர்கிழார்)

அறமுதனான்குமகலிடத்தோரெல்லாந் . .. *
திறமுறத்தேர்ந்து தெளியக்-குறள்வெண்பாப் . *

பன்னியவள்ளுவனார்பான்முறைதேரொவ்வாதே .. *
முன்னைமுதும்வார்மொழி .. ... . .. (௩௮)

(உறையூர்முதுகூத்தனார்)

தேவிற்சிறந்ததிருவள்ளுவர்குறள்வெண் .. *
பாவிற்சிறந்திருமுப் பாலபகரார்-நாவிற் . . *

குயலியிசைசொற்சுவையோர்விலலைமற்றுஞ் .. .. *
செயலில்லை யென்னுந்திரு .. .. ... (௩௯)

(இழிகடபெருங்கண்ணனார்)

இம்மைமறுமையிரண்டுமெழுமைகளுஞ் .. .. . *
செம்மைநெறியிற்றெளிவுபெற மும்மையின் .. *
வீடவற்றினின்பவிழுமங்கள்வள்ளுவனார் ... *
பாடினாரின்குறள்வெண்பா... ... .. ...(௪௰)

திருவள்ளுவமாலை.

வத்திவிருவினைக்கு மாமருந்து- முந்திய ... ..*
நன்னெறிநாமறியநாப்புலமைவள்ளுவனார் . *
பன்னியவின்குறள்வெண்பா .. ... - - (௫௧)

(மதுரைப்பாலாசிரியனார்)

வெள்ளிவியாழம் விளங்கிரவி வெண்டிங்கள் - - - - *
பொள்ளெனநீக்கும்புறவிருளைத்-தெள்ளிய - - - - *
வள்ளுவரின்குறள்வெண்பாவகிலத்தோ - - - - - *
ருள்ளிருணீக்குமொளி - - - - - - - - (௫௨)

(ஆலங்குடிவங்கனார்)

வள்ளுவர்பாட்டின்வளமுரைக்கின்வாய்மடுக்குந் - - - *
தெள்ளமுதின்றீஞ்சுவையுமொவ்வாதாற்-றெள்ளமுத - - *
முண்டறிவார்தேவருலகடையவுண்ணுமால் - - - - -*
வண்டமிழின்முப்பான்மகிழ்ந்து - - - - - - (௫௩)

திருவள்ளுவமாலை-முற்றியது.

---

(இடைக்காடர்பாடல்)

கடுகைத்துளைத்தேழ்கடலைப்புகட்டிக் . - - *
குறுகத்தறித்தகுறள் - - - *

---



உ

சிவமயம்.

# திருவள்ளுவநாயனார்

## சரித்திரம்.



உலகத்துள் மஹா சிறப்புப்பொருந்திய கைலாசகிரியிலே அரசிருக்கை மண்டபத்தில் பிரம்மாதி முப்பத்து முக்கோடி தேவர்கள் - நாற்பத்தெண்ணாயிர முனிவர்கள் - கின்னரர் - கிம்புருடர் - கருடர் - காந்தருவர் - சித்தர் - வித்தியாதரர் - முதலானவர்கள் வணங்கிச் சூழும்படி பார்வதிசமேதராய்ப் பரமசிவன் திருவோலக்கமாக எழுந்தருளியிருந்தார் — அப்போது தேவியானவள் எழுந்து வணங்கி நின்று - ஸ்வாமி திரிலோகத்திலே இல்லறம்வழுவாது நடந்து கதியடைந்தவருண்டோ வென்றுவினவ, ஸ்வாமி திருவுளம் பற்றுகிறார் — உமையவளே தெய்வலோகத்தில் வசிஷ்டர் - அகஸ்தியர் அயன் - புயங்கன் - சம்பு - என்றைந்துபேருண்டு பூலோகத்தில் திருவள்ளுவனென் றொருவருண்டு இவர்கள் தென்புலத்தார்கடன் - தேவர்கடன் - விருந்தோம்பல் - சுற்றந்தழுவல் - கபிலபூசைசெய்தல் - முதலிய இல்லறத்தில் கறபின்வழுவாத நற்குண நற்செய்கையுள்ள மனைவியரோடிருந்து இல்லறக்கடன் நடத்திக் கதியடைந்தாரென்று திருவாய்மலர்ந் தருளப், பூலோகத்திலே திருவள்ளுவர் எனபவர்-யாரென்று கேட்க, பூர்வத்திலேஒருபிரளயம்வந்தது, அதுவருமென்று பிரம்மா முன்னமே தெரிந்து அதிலே இறவாது பிழைக்கும்படி வேற்றுவடிவமாய் ஒருசுரைக்கூட்டைத் தனக் கிடமாகக்கொண்டு அதிற்புகுந்து அவ்வெள்ளத்தின்மேல் மிதந்துவந்தார். அதுகண்டு, நாம் அறியாதவர்போல் இதற்குளிருப்பவன் யாரென்று கேட்டோம். தான் வருங்காலமறிந்து செய்தற்கேற்ப வள்ளுவனென்றார் — இப்பிரளயத்தில் நீர் எப்படிப் பிழைத்திருந்தீரெனக்கேட்க, ஸ்வாமியென்றுதெரிந்து-மிகுந்தபேரானந்தத்தை யடைந்து - பரமசிவனே உமது திருவருளினால்

பிழைத்திருந்தேன். ஆயினும் இந்தப்பிரளயத்தை நீக்கியருள் செய்யவேண்டுமென்று வேண்டிக்கொள்ள, நாம் அந்த அதிகாரம் உமக்கே கொடுத்தோமென்று அவராலே முன்புபோல் உலகத்தைச் செய்வித்தோம் - அத்தன்மையுடைய அவர் பூமியிலே பிறந்த காரணமுஞ்சொல்லுகிறோம்.

ஆதிகாலத்தில் பூமியிலே பாண்டிநாட்டில் மதுரைமாநகரத்திலிருந்த சங்கப்புலவர்கள் நம்மை அவமதிப்புச்செய்ததினிமித்தம் அவர்கள் கர்வபங்கமாகுமட்டில் பிரமஸ்வரூபராகிய திருவள்ளுவனையும் - மஹாவிஷ்ணுவையும் - சரஸ்வதியையும் - பூமியில் அவதரிக்கும்படி அனுப்பினோம் அவருள மஹாவிஷ்ணு - இடைக்காடராய்ப் பிறந்தார், சரஸ்வதியும - திருவள்ளுவரும் வந்த மரபுங்கேட்பாயாக

ஆதியிலே பிரம்மபுத்திரர்களாகிய காசிபர்முதலிய நவப்பிரம்மாக்களில் காசிபர் ஊர்வசியைச்சேர்ந்து வசிஷ்டரைப்பெ

ற்ரூா, அவர் அருந்ததியைச்சேர்த்து சத்தியனைப் பெற்ருர், அவா புங்கனூர்ப் புலைச்சியைச்சேர்த்து பராசரைப்பெற்ருர், அவர் மச்சகந்தியைச்சேர்த்து வியாசரைப்பெற்ருர், இவர்கள் நால்வரும் வேதங்களுக்குரியவராஞாகள்,

பிம்பு பிரப்மாவானவர் இன்னுஞ் சில புத்திரரால் வடமொழியையுந் - தென்மொழியையும் விளங்கச்செய்ய வேண்டுமென்றெண்ணி - வேதவிதிப்படி ஒரு யாகஞ்செய்ய அதன் கனலைவைத்திருந்த கும்பத்திருந்து கலைமகளவதரித்தனள, அவளைப் பிரமன் விவாகஞ்செய்துகொண்டார், பின்பு அகலுதியர் குறியவடிவோடு அகுெம்பத்துதித்தனர், அவர் சமுத்திரகன்னிகையை மணந்து பெருஞ்சாகர னென்பவரைப் பெற்ருர், அவா திருவாரூர்ப் புலைசியைச்சேர்ந்து பகவனென்பவரைப்பெறறு அவாகருச் சகலசாஸ்திரங்களையும் கற்பித்தார்- அந்நாளில் பிரம்மவம்சத்தில் தவமுனியென்பவர் அருண்மங்கையெனனும் பிராமண மாதைச்சேர்ந்து ஒருபுத்திரியைப் பெறறுவைத்து விராலிமலையில் தவஞ்செய்யச் சென்றனர், அக்குழந்தையை உறையூர்ப் பெரும்பறையன் கண்டெடுத்துச் சிலகாலம் வளர்த்து வருகையில மேல் நடக்கப்போகிற காரணத்திஞல இந்தப்பெணதவிர மற்றவர்கள்யாவரும் இறக்கும்படி அந்தச்சேரியில் யாதுகாரணமோ மண்மாரிபெய்

தது, பின்பு அந்தப்பெண் அதற்கடுத்த மேலூர் அகரத்திலே நீதிபையன்வீட்டில் வளர்ந்திருந்தனள்

அப்போது பகவனென்பவர் சகலசாஸ்திர பண்டிதராய்க் கண்டவர் யாவரும் மரியாதைபண்ணும்படி பிராமண கிருத்தியத்தில் வழுவாதவரா யிருக்கையில், யாத்திரைபண்ணும்படி இச்சைகொண்டு - காசிக்குப்போகும்போது இவ்வகரத்துக் கடுத்த ஒருசத்திரத்தி லிறங்கி நித்தியகருமங்களை முடித்துக் கொண்டு சமையல்செய்திருந்தார்— அவ்விடத்தில் அந்தப் பெண்வர அவளைக்கண்டு நீயார் புலைச்சியோ - வலைச்சியோ- இங்கேவந்தாயென்று அதட்டி மிகுந்தகோபங்கொண்டு சட்டுவத்தால் அவளுது தலையிலே உதிரஞ்சோர அடித்தோட்டினார்— அவள் அழுதுகொண்டு தன்னிடத்துக்குப் போய் விட்டாள்

மறுபடியும் பகவனென்பவர் ஸ்நானஞ்செய்து போசனம் பண்ணி அதிசீக்கிரத்தில் வழிகொண்டு சிலநாளிற் காசிக்குப் போய்க் கங்காஸ்நானஞ்செய்து பிரயாகையிலிருந்து தீர்த்தக்காவடி கட்டிக்கொண்டு வரும்போது அந்தச்சத்திரத்தில் வந்திறங்கினார் மேற்சொல்லிய பெண்ணானவள் அப்போது மஹாலட்சுமியைப்போலும் அழகும், யௌவன பருவமும், உடையவளாய்-அங்கேவந்தாள், பகவனென்பவர் இவளுடைய சௌந்தரிய முதலிய குணங்களைப்பார்த்து-மோகங்கொண்டார், அச்சத்திரத்துக்கு அதிபராகிய நீதியையரென்பவர் அக்குறிப்பினைக்கண்டு என்பெண்ணை விவாகம் பண்ணிக்கொண்டு இங்கேயிருமென்றுசொல்ல- அதற்கவர் நான் கொண்டுவந்த காவடியை இராமேசுரத்திற் செலுத்திவந்து அப்படியே செய்கிறேனென்று அவரிடத்திற் செலவுபெற்றுக்கொண்டுபோய் இராமலிங்கத்துக்கு அபிஷேகம்பண்ணித் திரும்பிவந்தார் அப்போது நீதியையர் விவாக எத்தனப்பண்ணிப் பந்துக்களோடிருந்து விசேஷமாய் நாலுநாளைய சடங்குகளும் செய்து ஐந்தாநாள் மங்களஸ்நானஞ் செய்விக்கும்போது பகவனென்பவர் அந்தப்பெண்ணினுடைய தலையில் எண்ணெயைப்பெய்யும்படி பயிலாவகித்தார்கள்,— அப்போது தாலிமுடிப்பு சட்டுவத்தாலடித்த வடுவைக்கண்டு அனுமானித்து இந்தப் பெண்ணினது வரலாற்றையும் விசா

ரித்து விசனங்கொண்டு நீ ஆதிய லல்லவாவென்று சொல்லி விட்டு ஒடினர், அதுவே அவளுக்கு ஆதியென்றக் காரணப் பெயராயிற்று.

அப்படி போடிய பகவனென்பவர் பொழுது போகையா ல் எதிரேகண்ட பாணர்சேரியிலிருந்த ஒருமண்டபத்திலே தங்கினர், ஆதியென்பவளும் அவர்பின்னே தொடர்ந்து அவ ரைக்கண்டு தெய்வச்செயலால் உனக்கும் எனக்கும் இந்தக்கா ரியம் நடந்திருக்க நீரென்னைவிட்டுப்போகுதல் உமக்குத்தகு மோ, அல்லது தருமமோவென்றும் உம்மைநீங்கினல் உயிர் வாழேனென்றும் மிகவும் இரக்கத்துடன் சொல்லப் பிராரத் துவத்தால் இவர் புத்தியினும் அதுசரியென்றுபட்டுப் பெண் ணே என்னிடத்தில் உனக்கு அன்பிருக்குமானல் யான்சொ ன்னபடி கேட்கவேண்டும், அஃதென்னெனில் உனக்குப்பிள் ளைகள் எங்கெங்கே பிறக்கிறதோ அங்கங்கே யதுகளை அப் பொழுதே விட்டு வருவையானல் யான் உன்னைக்கூடச் சம்ம திப்பே னென்றுசொல்ல அவளதற்கு உடன்பட்ட படியால் அன்றிரவில் அம்மண்டபத்தி லிருவருங்கூடினர்கள்

ஔவை.

அப்போது பரமசிவன் உத்தரவின்படி சர்வதி யாவரா லும் புகழப்பட்ட ஔவையாகிப்பிறந்தாள், இந்தக்குழந்தை யையாவர் காப்பாற்றுவா ரென்று விட்டுநீங்கத் தாய் வருந் தும்போது அது சொல்லியது.

(வெண்பா)

இட்டமுடனென்றலையி லின்னபடியென்றெழுதி ✻
விட்ட சிவனுஞ்செத்து விட்டானே - முட்டமுட்டப் ✻

பஞ்சமேயானாலும் பாரமவனுக்கன்றோ .. *
நெஞ்சமேயஞ்சாதே நீ . . . .. *

அதுகேட்டு மனந்துணிந்து போயினள், பின்பு அக்குழந்தையை அச்சேரியிலுள்ள பாணர்களெடுத்து வளர்க்க வளர்ந்து சரஸ்வதி யாகையால் இயல்பாகவே கலைமுழுவதுமறிந்து, (சிதக்களபவெண்ணும்) கணபதி அகவல்பாடி அவரை உபாசித்து லோகோபகாரமாக (ஆத்திசூடி, கொன்றைவேந்தன், மூதுரை, நல்வழி, குறள், அசதிக்கோவை, நன்னூற்கோவை, நான்மணிக்கோவை, பந்தனந்தாதி, அருந்தமிழ்மாலை, தரிசனப்



பத்து)முதலியவுஞ்செய்து ஒவ்வொரு காரியத்தின்பொருட்டுத் தனிக்கவிதைகளநேகமும்பாடி அநேக அற்புதங்களெல்லாஞ்செய்து முடித்துவருநாளில் ஒருநாள் கணபதிபூசை விரைவாகச் செய்தாள் அவர் வழக்கப்படியன்றி விரைந்து செய்வது ஏனென்றுகேட்க ஸ்வாமி சுந்தரமூர்த்தியாரும் சேரமான்பெருமானும் கைலாசத்துக்கு போகின்றார்கள் என்னையும் அழைத்தார்களென்ன அவர்களுக்கு முன்னே உன்னை அங்கேவிடுவேன் நீ பூசையை வழக்கப்படிமுடியென்றார் தன்பூசையைக் கிரமப்படி முடித்தாள் உடனே கணபதி துதிக்கையா லெடுத்து விடக் கைலாசமலையை யடைந்தாள் பின்பு போன அவ்விருவரும் ஔவையைக்கண்டு அதிசயப்பட்டார்கள்.

## உப்பை

இதற்கு முன்புபோன இருவர்களும் தொண்டைநாட்டில் ஊற்றுக்காடென்னும் ஊரிலுள்ள தோர் மடத்திற்சென்

று கூடினார்கள் அப்பொழுது உப்பையென்பவள் பிறந்தாள் இந்தக்குழந்தையை யாவர் காப்பாற்றுவா ரென்று அதை விட்டு நீங்கத் தாய் வருந்தும்போது அது சொல்லியது.

அத்திமுதலெறும்பீ றானவுயிரத்தனைக்குஞ் *
சித்தமகிழ்ந்தளிக்குந் தேசிகன் - முற்றவே *
கற்பித்தான்போனானோ காக்கக்கடனிலையோ *
வற்பனேவன்னு யான் *

அதுகேட்டு மனந்துணிந்து போயினா [illegible]
பிறப்பில் யாளியில், பிருகுவின் பக்கிரியா [illegible]
யென்பவள் திரிமூர்த்திகளும் அவள் அழகின் [illegible]
கேள்விப்பட்டுப் பார்க்க மாறுவேஷங்கொண்டு [illegible]
ணபிட்சைகேட்டார்கள் அவள் மஹாபதிவிரதை [illegible]
இவர்களைப் பாலராக்கி அப்படியே பாலகொ [illegible]
ப் பரிசோதித்ததற்குக் கோபங்கொண்டு அவர்களை [illegible]
சனனம் எடுக்கும்படி சொன்னாள் அதுகண்ட திரிமூர்த்த[illegible]
ளுந் தங்களை அவள்மதிக்காமல் பாலராக்கி [illegible]சனனம் பண்ணும்படி சொன்னதற்காகச் சினங்கொண்டு நீ அழகின்றி மாறுவடிவாகக் கூடவையென்று சபித்துப்போயினர் பின்பு

பிருகுவானவன் இவள் வேற்றுவடிவங்கொண்டு நீ பூமியில் பிறக்கக்கடவையென்றனர் அவள் கணையுந்த்ரசியிடம் உப்பையென்னும் அவதரித்து வண்ணார் வளர்க்க வளர்ந்து, மாரியம்மையாய் உலகமெல்லாந் தன்னைப்போற்ற இப்பொழுதும் அவ்வூரில் தெய்வமா யிருக்கின்றனள்.

அதிகமான்

இதுநிற்க முன்புபோன அவ்விருவருஞ் சோழதேசத்திற் கருவூரி லடைந்து ஒருசோலையிற்கூட அதிகமானென்பவர் பிறந்தார், இந்தகுழந்தையை யாவர் காப்பாற்றுவா ரென்று அதைவிட்டு நீங்கத் தாய்வருந்தும்போது அது சொல்லியது.

(வெண்பா)

கருப்பைக்குண் முட்டைக்குங் கல்லினுட் டேரைக்கும் *
விருப்புற்ற முதளிக்கு மெய்ய - னுருப்பெற்று *
ஊட்டிவளர்க்காதே வோகெடுவாயன்னாய்கேள் *
வாட்டமுனக்கேன் மகிழ் ..... *

அதுங்கேட்டு மனந்துணிந்து போயினள் — அந்தக் குழந்தையைச் சேரமானெடுத்துவளர்க்க வளர்ந்து வில்வேதம், ம

னுவிடகியான முதலியவையுங்கற்றுமுடிசூட்டப்பெற்று சொக்கநாதர் திருமுகமெழுதிக் கொடுக்க பாணபத்திரருக்கு வேண்டிய திரவியங்கள்கொடுத்துப் பொன்வண்ணத்தந்தாதி யென் றோர் பிரபந்தம்பாடிச் சிதம்பரத்தி லரங்கேற்றி அரசுசெலுத்திச் சுந்தரமூர்த்தியார் நட்புப்பெற்றிருந்து அவர் கைலைக்குப் போகும்போது உடனேபோய் அங்கே தாம் பாடியருளிய ஆதியுலாவை அரங்கேற்றிச் சிவானுக்கிரகம் பெற்று வீற்றிருந்தார். உருவை.

முன்புபோன அவ்விருவரும் காவிரிப்பூம் பட்டினத்தடைந்து ஒருமண்டபத்திற்கூடினார்கள் உருவையென்பவள்பிறந்தாள். இந்தக்குழந்தையை யாவர்காப்பாற்றுவாரென்று அதைவிடநீங்கத் தாய்வருந்தும்போது அது சொல்லியது.

(வெண்பா) 8

சண்டைப்பைக்குள்ளுயிர்தன் னுருத்தானருந்தும்
அண்டத்துயிர்பிழைப்பதாச்சரிய - மண்டி .. . *
புவிங்கின்றவன்னு யாளுடையவுண்மை. . ., . . . *
நிலைகண்டுநீயறிந்த தில் . . . . . * ............ *



அதுகேட்டுத் தாய் மனந்தணிந்துபோயினள். பின்பு அக்குழந்தையைக் கள்விற்போரெடுத்து வளர்க்கவளர்ந்து தவஞ்செய்து பத்திரகாளியாய்த் தாருகனைக்கொன்று திருவாலங்காட்டில் சபாநாயகருடனே நிருத்தஞ்செய்து அதிலேதோற்று அகோரவீரபத்திரரை விவாகம்பண்ணிக்கொண் டவ்விடத்

இறந்திறக்க முன்பு அவ்விடம்விட்டுப்போன இருவரும் திருவாரூரை யடைந்து ஒருமடத்திற்கூடக் கபிலரென்பவர் பிறந்தார். இந்தக் குழந்தையை யாவர் காப்பாற்றுவா ரென்று அதைவிட்டு நீங்கத் தாய் வருந்தும்போது அதுசொல்லியது.

(வெண்பா.)

கண்ணுழைபாக்கோட்டிக் கருங்கற்றவளைக்கு *
முண்ணும்படியறிந்தூட்டுமவர் - நண்ணு *
நமக்கும்படியளப்பார் நாரிபோர்பாகர் *
நமக்குத்தொழிலென்ன தான். *

அதுகேட்டு மனந்துணிந்துபோயினள் அக்குழந்தையைத் தமக்குப் பிள்ளையில்லாத பாப்பையனென்னும் ஒரு பிராமணனெடுத்து வளர்த்து எழுவயதில் உபநயனம் செய்யத் தொடங்குகையில் பிராமணர்கள் ஒத்துக்கொள்ள மாட்டோமென்றுசொல்ல அதைக்கண்ட கபிலர் அவர்களைப்பார்த்து நான்முகத்தோ னென்றோர் அகவல்சொல்லிக் கருமத்தினால் ஜாதியன்றிச் சென்மத்தால் இல்லையென்று சாதிக்க, அதற்குப் பிரதியுத்தரஞ் சொல்லமாட்டாமல் இதுவே விதியென்று யாவரும் ஒத்துகொண்டு அச்சடங்கு முதலானவை முடித்தார்கள். அக்கபிலர் இன்னும் பாதாள வுலகத்தில் தவம் பண்ணிக்கொண்டிருக்கின்றனர்.

வள்ளியம்மை.

இதற்கு முன்புபோன அவ்விருவரும் வெளிமலைச் சார லில் வந்துகூட, அப்பொழுது வள்ளியம்மைபிறந்தனள். இக் குழந்தையை யாவர் காப்பாற்றுவாரென்று அதைவிட்டு நீங் கத் தாய்வருந்தும்போது அதுசொல்லியது.

(வெண்பா)

அன்னைவயிற்றி லிருத்தி வளர்த்தவன்று *
இன்னும்வளர்க்கானோ வென்றாயே - மின்னரவஞ் . *

சூடும்பெருமான் சிகாட்டிநின் றவினை *
யாடும்பெருமா னவன் *

அதுகேட்டு மனந்துணிந்து போயினன் பின்பு அக்குழந்தையை மலைக்குறவர் வளர்த்தார்கள்- அவன் முற்பிறப்பில் யாரென்னில், மகாவிஷ்ணுவினால் மோகிக்கப்பட்ட வியுதைபென்பவ ளிடத்திற் பிறந்த குமாரியென்பவள் குமாரக்கடவுளைக் குறித்துத் தவஞ்செய்தம்பொது அவர் வரப்படி தொண்டை மண்டலத்தில் வள்ளிமலையிலிருந்தகடவுளுக்கு நாயகியானாள்.

திருவள்ளுவர்

முன்புபோன அவ்விருவரும் மயிலாப்பூரில் இலுப்பைத் தோப்பில் கூடினார்கள் அப்பொழுது திருவள்ளுவர் பிறந்தனர் இந்தக்குழந்தையை யாவர் காப்பாற்றுவாரென்று அதை விட்டு நீங்கத் தாய்வருந்தும்போது அது சொல்லியது.

(வெண்பா)

எவ்வுயிருங்காக்கவொரு வீசனுண்டோ வில்லையோ *
வவ்வுயிரில்யானொருவ னல்லவோ - வவ்வி *
யருகுவதுகொண்டிங் கலைவதேனன்னே *
வருகுவதுதானே வரும் *

அதுகண்டு மனந்துணிந்து அவ்விருவருந் தீர்த்தயாத்திரைக்குப் போயினர் பின்பு சிவாலயத்தின் அருகேயுள்ள இலுப்பைமரத்தின்கீழிருந்த குழந்தை அவ்விலுப்பைமலரிற் றளிக்குந் தேனையுண்டு பூர்வம் பிரம்மா வாதலால் சிகை எக்யோபவீதம் சதுர்வேத புஸ்தகமுங்கொண்டு வளர்கையில் கங்காகுல சிரேஷ்டனாகிய ஒருவேளாளன் மனைவி புத்திரனைக் குறித்து அச்சிவாலய சந்நிதியில் தவஞ்செய்திருந்தாள்—அப்பொழுது உமாதேவி அவளுடைய தவத்திற்கிரங்கி, தெய்வச்செயலாலுண்டாகிய இந்தக்குழந்தையை நீ யெடுத்துக்கொள்ளென்றருள்செய்து திருவள்ளுவரென்று பூர்வநாமகரணமுஞ் செய்தாள் அவளும் அந்தக்குழந்தையை யெடுத்து மகிழ்ச்சியடை

ந்துக் கொண்டுபோய்த் தன்புருஷன்கையிற் கொடுத்தாள்—
அவனுந் தன்கையில் வாங்கி போனநிதம் பெற்று அதுவந்
த வரலாறு கேட்டு இப்படி இருவரும் அந்தப் பிள்ளையை நா
ளொருமேனியாகவளர்க்குங்காலத்தில் அவர்கள்சுற்றத்தார்கள்
ஏதோ ஒரு பிள்ளையை வளர்க்கிறார்களென்று இவர்களையிகழ்ந்

சிபன்னை, அதற்கு அவர்களஞ்சிப் புறத்திலுள்ள தோர்தொழு
வத்திலே தொட்டிவிட்டு அதில் அக்குழந்தையைக் கிடத்திப்
பணிக்காரரைக் காவல்வைத்து வளர்த்தார்கள். பின்பு திரு
வள்ளுவரும் ஐந்தவயதானகாலத்துத் தன்பொருட்டுத் தாயும்
தகப்பனும் சுற்றத்தார்களால் நிந்தைசெய்யப் படுகிறார்களெ
ன்று அவர்களைப்பார்த்து, என்னால் உங்களுக்கு வருத்தம் வே
ண்டுவதில்லை நான்வேரிடத்திலிருக்கின்றேன் நீங்கள்வருந்தாதி
ருங்களென்று சொல்ல, அவர்கள் அப்பா உன்னைப்பிள்ளைக்
கலிதீர்க்கவந்த பெருமானென்றெண்ணியிருந்தோமே நீஇப்
படி சொல்லலாமாவென்ன, நாயனார் நீங்கள் என்னை நினைக்கு
ம்போது வந் துங்களுக்கு வேண்டியதைச் செய்வேனென்று
சொல்லிப் புறப்பட்டு அவ்வூர்க்கருகே ஒருபனைமரத்தி னிழ
லிலேயிருந்தார். அப்பனைமரம் தன்னடிவிட்டு நிழல் சாயாதி
ருக்கக் கண்டவர்கள் இப்பிள்ளை தேவனோ, முனிவனோ, கடவு
ளோ, இவ்வுருவோவெவர்தனென்று துதிக்க - அவர்களைப்பார்த்
து நாயனார் இங்கே தவமேது - முனிமையேது - யாதொன்றும்
என்னிடத்திலில்லை பேரறமென்று, தாம் அவ்விடத்தைவிட்டு நீங்
கித் திருமூலர் - போகர் - முதலாகிய சித்தர்களும் - மாதவர்
களும் - வாசஞ்செய்கின்ற மலைக்கெழுந்தருளித் தவஞ்செய்
வார்களோடு கூடியிருந்தார். அங்கிருந்த திருமூலரிவரைக்
கண்டு வள்ளுவரோ, பூர்வத்தில் நந்தி எனக் கனுக்கிரகம்பண்ண
னும்போ தங்கே யிருந்தீரோ, உலகத்தாருக்குச் சித்தி முத்தி
யருளும்படிக்கும், அறம்பொரு ளின்ப மென்னு முப்பாலை
யுந் தமிழில் அருளிச்செய்யும்படிக்கும், இங்குவந் தவதரித்தீ
ரோவென்று துதிக்க, நாயனாருமகிழ்ந்து அங்கே தவஞ்செய்
வோரில் ஒருவராயிருந்து சகலசாஸ்திர பண்டிதரானார் அக
காலத்தில் தொண்டைமண்டலத்தி லொரு வேதாளமானது
பயிர்களை அழித்தும், உயிர்களை வதைத்தும், அநேகந் துன்ப
[illegible]

[illegible]
ஒரூரில் ஆயிரம் ஏர்கொண்டுழுது பயிர்செய்கின்ற மார்க்க சகாயனென்னும் ஒரு வேளாளன் இந்தவேதாளத்தை அடக்கி னவருக்கு அளவற்ற திரவியமும் ஒரூரும் வேண்டியவைகளை யுந் தருகிறேனென்று பிரசித்தம்பண்ணினான். அது ஒருவரா லும் ஆகாமலிருந்தது. பின்பு அவ்வேளாளன் திருமூலராகி

## திருவள்ளுவநாயனார் சரித்திரம்.

யர் வாசஞ்செய்யும் மயிலையிலே யிருக்கும் பெரியோர்களி டத்திலே சொல்ல, அவர்கள் திருவள்ளுவரோகிபெயர்லலென் றார்கள், அவ்வாறே வணங்கிச்சொன்னான். அப்போது சிவகாருணி யராகிய திருவள்ளுவர் அவ்வேளாளன் மேன்மையடைந்திகொள்வதை நிறைவேற்றும்பொருட்டு அவ்வேளாளன் தன்னை விபூதி பஞ்சாட் சரத்தால் வென்று யாவரையும் ரக்ஷித்தார். பின்பு அவ்வேளா ளன் ஒருரும் அளவற்றதிரவியமுமுடையவனாகும் நாயனார்போக் கியத்தையும் மகத்துவத்தையும் பார்த்து, வாசுகியென்னும் தன்பெண்ணையுங் கொடுக்கும்படி நிச்சயித்து நாயனாரிடத்து வந்து என்பெண்ணைத் தேவரீருக்குக் கொடுக்க நினைத்திருக்கி றேன் அப்படியே அங்கீகரிக்கவேண்டுமென்று சொன்னான். நாயனார் உலகத்தாருக்கில்லறநடத்திக்காட்டவேண்டுங்காரணத் தை யோசித்து, அந்தப்பெண் நான்கொடுக்குமணலை அன்ன மாக்கி எனக்கிடுமானால் விவாகஞ்செய்து கொள்ளுவேனென் றார். அந்தப்பெண் அப்படியே சம்மதித்து சமைத்துப் ப டைத்தனள். நாயனாரும் அங்கீகரித்து விதிப்படி வாசுகியை விவாகஞ்செய்து சிலநாளிருந்து பின்பு மனைவியுடன் மயி லையில் வந்தோ ரில்லாக்கிக்கொண்டு இல்லறஞ்செய்து நெய் தற்றொழில் பாபமில்லாததென்று ஏலேலசிங்கனென்னும் வர் த்தகனிடத்தில் [illegible] ஆடைநெய்து அக்கூலியால் சீவ னஞ்செய்திருந்தனர். பின்பொருகாலத்தில் திருவாலங்காட் டில சபாநாயகர் மைடசங்காரஞ்செய்து கொவித்திருந்த பத் திரகாளி கெர்வபங்கமாகப் பலவிதநடனஞ்செய்ய அவளுந் தோல்வியடையாம லாடிவந்தாள். பின்பு ஸ்வாமி குண்டலந் கழன்றதைக் காதிலேதானே சேரும்படி ஊர்த்துவபாதமாக நடனஞ்செய்தார் அவளு மப்படியாட நாணித்தோற்றாள். அப்பொழுது தேவர்கள் சுவாமி தேவரீ ரூர்த்துவதாண்டவம் பண்ணிய தென்னகாரணமோ தெரியவில்லை யென்றுகேட்க, நீர் திருமயிலையிலிருக்குந் திருவள்ளுவரைக் கேட்டீர்களானால்

தெரியுமென்று சொல்ல, தேவர்களக்கேபோ யவனைக்கேட்க, அவர்சொல்லியது.

(வெண்பா.)

பூவிலயனும் புரந்தரனும் பூவுலகத் ........... *
தாவியளந்தோனுந் தாழிருக்க - காவி ........... *



விழைநக்கி நூனெருடு மேழையறிவேனோ . . *
குழைநக்கும் பிஞ்ஞகன்றன் கூத்து . . . . . *

அதிலே தெரிந்து தங்கள சந்தேகந் தெளிந்தார்கள் ஒருநாள் நால்வாங்கும்பொருட்டு ஏலேலசிங்கன்வீட்டுக்குப்போய் செட்டியார் எங்கேயென்றுகேட்க, அவர் சிவபூசை செய்கிறாரென்றார்கள். அவர் சிவபூசை இங்குசெய்கிறாரோ குப்பத்திற் செய்கிறாரோ வென்ன, அதை அவர்பத்தினி உள்ளேபோய் அவருக்குச்சொல்ல, அவர்கேட்டுச் சிவபூசையை விட்டுத்திடுக்கிட்டோடிவந்து நாயனுருடைய உபயபாதங்களில் வணங்கி ஸ்வாமீ என்னைப் பந்தசாகரத்தினின்று மெடுத்துக் கரையேற்றவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, நாயனூர் அவரது பக்குவத்தையும் இன்னுஞ்சில மாணுகர் பக்குவத்தையும் சோதிக்கவெண்ணி, ஒருநாள் அவர்களை யழைத்துக்கொண்டு ஒருவனத்திற்சென்று அங்குவெள்ளம்பெருகிவரச்செய்தனர். அவர்கள்பயந்து மனுேநிடமின்றிஇக்கரையிலிருந்துடன்போகமாட்டாமல்விழிக்க,ஏலேலசிங்கர்மாத்திரம்தம்மைதொடர்ந்துவர,அவ்வெள்ளம் வழிவிட்டது பின்புஉயர்ந்த ஒருமரத்திலுனியி லேறென்று சொல்ல, ஏலேலசிங்கரேறினர் பின்புமிடி

த்த கொம்பையும் நின்றகொம்பையும் விட்டுவிடென்றருள, யோசியாமல் விட்டனர் விட்டும் ஒரு அபாயமில்லா திருந்த ஏலேலசிங்கரைத் தமது மடியின்மேல் வைத்து ஞானுபதே சம்பண்ணி எப்படிப்பட்ட சௌந்திரியமுள்ள மங்கையர்கள் மயக்கினு மயங்காத நிட்சித்தத்தையும் அனுக்கிரகித்தார் பி ன்பு தம்மிடத்துக்கு வந்துவிட்டார்கள் அப்படி யிருககு நா ளில், அந்நாட்டுக்கரசனுகிய அச்சுதராஜன் ஒருநாள்ஏலேலசிங் கரோடு பேசிக்கொண் டிருக்கும்போது உமக்குப் புத்திரப் பேறில்லையே உம்முடைய ஞானுசிரியரை அப்பேறுண்டாக க் கேட்கலாகாதா வென்ன, அவர் நல்லதென்று போய் மற் றொருநாள் நாயனுரைக்கண்டு விண்ணப்பஞ் செய்ய, அவர் ஸ்வாமிகடாக்ஷிப்பாரென்று அனுக்கிரகம்பண்ணினர் பின்புஒ ருநாள்பரமசிவமே சிறுகுழவியாய் ஏலேலசிங்கரும்அவர்மனை வியும் நித்தியந்தரிசிக்கும் பசுவின் வாலின்புறத்திற் கிடந்தழு வதைக்கண்டு அவ்விருவரும் இக்குழந்தையை எதெனவெடுத்



தார்கள் உடனே அந்த அம்மாள் ஸ்தனங்களிலே பால்சுரந்து பெருக, அக்குழந்தைக்குப் பாலூட்டித் தங்கள் குருவாகிய நா யனுர் சந்நிதானத்திற் கொண்டுபோனார்கள். அவர் அக்குழந் தைக்கு அழகான் ந்தமென நாமகரணம்பண்ணினர். உடனே ஏலேலசிங்கர் அச்சுத ராஜனென்னும் அரசனிடத்திற் சென் று எனக்குத் தெய்வ அனுக்கிரகத்தால் குழந்தை யுண்டாயிற்றென்று சொல்ல, அவன் அப்படித் தெய்வீகமுள்ள பிள்ளை இந்நிலையிலும் அது வரலாமேயென்றான். அவ்விருவரும் இப்படி பேசிக் கொண்டிருக்கும்போது அக்குழந்தை அரசனது மடியில்வந் திருந்தது

அதை அவன்கண்டு இது அழகானந்தமோவென்று ஆனந்த மடைந்து அணைத்துக்கொண்டு தன்மனைவிகையிற் கொடுக்க, அவள் வாங்கினவுடனே ஸ்தனங்களினின்று பால்பெருக, அத னைக் குழந்தைக்குப் புகட்டினாள் இப்படியற்புதமாய் வளர்ந் து பின்பு அனேகருக்கு ஞானோபதேசஞ் செய்து மகிமை யோடுமிருந்தனர்.—மற்றொருதினத்தில் ஏலேலசிங்கரது கப் பல் கரைதட்டிப்போக அதைக் கேள்விப்பட்டு அவர் தம்மா சனுடனே சொல்ல, அவன் நம்மாலாவதென்ன உம்முடைய ஆசாரியருடனே சொல்லுமென்ன, அவர்போய் விண்ணப் பம்பண்ணிக்கொள்ளுவதற்குமுன்னமே நாயனாரிருந்து ஏலே லசிங்கரை அழைப்பித்துக்கூட்டிக்கொண்டுபோய்க்கப்பலிற் கயிறுபூட்டி அனேகம் படவுகாரரிழுத் திழுத் தெவ்வளவும் அசையாமற் பதிந்திருப்பதனால் அவர்களெல்லாஞ் சோர்ந்து கிடப்பதைக்கண்டு நாயனார் அதனருகிற்சென்று தமது திருக் கையாற்றொட்டு ஏலையா வென்றிழுங்களென்று கட்டளையிட, அப்படியே யிழுத்தார்கள். உடனே நிற்கவேண்டியபடி கப் பல் நின்றது.

பின்பொருகாலம்மழையில்லாமையால் உலகத்திற்றானியங் கொள்ளக்கிடையாமல் அனேக ரிறந்துபோவதைக்கண்டு நா

யனார் தமக்கு அன்புள்ளமாணக்கனாகிய ஏலேலசிங்கரைப்பார் த்து, நீர் இந்தப்பஞ்சகால மாறுகிறவரைக்கும் வாங்கிக்கட்டி

வைத்திருக்கிற நெல்லையெல்லாம் வீசின் விலைக்கு குறுணி யேற்றமாக விற்ககடவை யென்றருள, அவரது சொல்ல ஆக

மாகக் கொணடு விறளுர் — பொருள் அதிவி்தரியாய் மலை போலுங் குவிந்தன, அவா கட்டிவைததிருந்த நெலலு ஏழு உருவுீங் குறைந்ததிலலை பின்பு மழைபெய்து உலகம ஷேம மமடைந்தது மறுபடி யவனை யழைத்துக குறுணி குறைய வில்லென்ருர் அப்படியே விறளுா அவரிடத்திருந்த நெல லெலலாம மறுநாள் அஸ்தமயத்துககுளளே செலவாய்ப் போய்விட்டன பின்பு நாயனுர் நீர் நெலலுவிறறு விர்த்தி யான பொருளையெலலாம் உருககித்திரடடிக கடலிற போட் டிவிடுமென, அவர் அப்படியே செய்தார் அதை யொரு பெருமீன் விழுஙகிற்று, சிலநாளைக்குப்பின்பு அமமீன் வலைக காரர்கையி லகப்பட்டது அதனை அவர்கள் சோதிககும்போ து அதன் வயிறறில் மனிமும் பாசியும் படிந்ததொரு ஸ்தம பமிருககஅதனைஏலேலசிஙகருககுககொடுத்தாாகள அவாசருங் கல்லென்றெணணி ஸ்தானடபணனுமிடத்திற போடுவித்தார்

அதன்மேல் நடத்தன்முதலிய பயிறசியால் மலினம நீங்கிப் பிரகாசிததது அதில் தமது பேர்வெட்டியிருத்தலால் தம்பொருளென்றறிந்து, குருவருளென்று அறபுதமடைந்தார் இப்படியிருக்குங்காலததில் அளவில்லாத மகிமைசெய்து லோகப் பிரசித்தமா யிருக்கிறவரும் ஏலேலசிங்கருடைய புத்திர நிற்பாககியததை நீககினவருமாகிய அழகானந்தரும சில பெரியோர்களும் திருவள்ளுவரைப்பார்த்து கறறு கெளிதாய் இம்மையாதி மும்மைககு முதவியாய் லோகோபகாரமாய் உமது பெயரால் ஒருநூல செய்யவேணடுமென்று சொலல, நாயனுர் வேதாகம ஸாரங்களைததிரட்டி - அறம் - பொருள்-இன்பமென முப்பாலாககி, (கூகாாகய) குறள் வெணபாவாற் பாடியருளினுர் பின்பு அழகானந்தா முதலாயினேர் நாயனூரே, இதைககொணடு சங்கத்தாரைச் செயிககலாம்போமெ ன்ன, அப்போதே நாயனுர் புறப்பட்டுத் தமது மனைவியை இல்லின்க ணிருத்தித் தாம் வழிககொடு நடந்து இடைககாடர் வசிககிற இடைககழி நாட்டை அணுகச்சேர்கையில், ஔவை நேர்பட - அவளோடும் இடைககாடரைக்கணடு தாஞ்செல்லும் வகையைச்சொல்ல, இடை காடரும் நாயனுரைநோககி இடையாலும் கடையாலும் மழியககடவதென்று ஸவாமி தம்மை நிராகரித்த நகரேராதி சங்கததாரைச் சபித்திருக்கிறுர் —

ஆதலால் என்றும் முமமாலு மழிவுபடப்போகிறதாகையால் நாமும வருகிம்ரும வாருமென்று இடைககாடரும ஔவை யுங் கூடவரப்பெறறு மதுரையை யடைந்து சொக்கலிங்க ஸ்வாமியினுடைய ஆலயத்தைப் பிரதடசணம்பண்ணி, ஸ்வாமியையும் அம்மையையும தரிசனஞ்செய்து, ஸ்வாமி சந்நிதானத்தில் பாணடிய ராஜா மந்திரி பிரதானிகள் மறறச்சனங்கள் ஔவை இடைககாடர் முதலான பெரியோர்களிருந்து கேட்குமபடி தாமருளிச்செய்த திருககுறள் முப்பாலையும சங்கத்தாரெருசிற நிலேறவும, எனையர்நெஞ்சிற களிப்பேறவும், அரங்கேறறிமுடித்தனர் — அதனைககேட்டோர்கள் யாவரும் மிகுந்த சந்தோஷமடைந்து ஆனந்தமாகி, நாயனரைப்புகழ்ந்து துதிததனர்

பின்பு நாயனர் இடைக்காடரும் ஔவையும் மற்றவர்களுஞ் சூழ்ந்துவர பொறறாமரைத் தீர்த்தத்தின்கணுள்ள சஙகப்பலகையிலிருந்து தமிழ்ககரசராக வீற்றிருககின்றவர்களும் தவத்திலும் ஞானத்திலும் செந்தமிழ்வாககிலும அமைந்த பெரியோராகிய திருவாதவூரரென்னும் மாணிககவாசக சுவாமிகள் அருளிசசெய்த திருககோவையார் நானூற்றுககும் நூறுறுறை கூறினவர்களும, சொககலிங்க ஸ்வாமி தமதன்பருகிய தருமியென்னும பிராமணனுககுப் பொறகிழி கொடுக்கப்பொருட்டு அருளிசசெய்த கொங்குதேரென்னும் பாடலுககு குறறங்கூறச் சோமசுந்தரனே வித்வானு யெழுந்தருளிவர, நெற்றிககணகாட்டினுங குறறங் குற்றமே யென்று கூறினவர்களும், மறறப் புலவர்கள் பாடிய பாடலை யெல்லாங்

கொள்ளையிட்டு, அகஸ்தியனையும் வெற்றிகொள்ளத்தக்க வில
க்கண விலக்கிய வாராய்ச்சி யுள்ளவர்களுமாகிய நக்கீரராதிப்
புலவர்களுடைய தைரியமும் தருக்கும் புத்தியும் கலங்கிச்
சோர்வடையும்படி ஆட்டுக்கூட்டத்தில் புலிபுகுந்தாற்போல
வும், அராக்கூட்டத்தில் கருடனடைந்தாற்போலவும், யானைக
கூட்டத்தில் சிங்கவேறு சென்றாற்போலவும், மூங்கில்வனத்தி
ற் றீப்பரவியதுபோலவும், அவர்களிடத்திற்சென்று அவர்கள்
தம்மை வினவின அசதியிறுவிற கேள்விக்குச் செந்தமிழ்ப்பாக்
களா லுத்தரமளிக்க [illegible]

பின்பு சங்கத்தார் நாயனாரைநோக்கி வள்ளுவரே, நீர்பாடிய குறளை நாங்க ளொப்புக்கொள்ளுவதற்கு ஐயமொன் றுளது அஃதியாதெனில், நாங்களிருக்கு மிந்தப்பலகைதெள்ளிய செந்தமிழ்நூல்களன்றி யிடங்கொடுக்குமாதலால் அது ஒப்புக்கொள்ளுமாகில் எங்களுக்கெல்லாஞ் சம்மதியென்று சொல்ல, அவ்வாறே நாயனார் தம்மால் அருளிச்செய்யப்பட்ட திருக்குறள் முறையை அச்சங்கப்பலகைமீது வைத்தார் - உடனே அப்பலகை தன்னிடத்திருந்த சங்கத்தார் யாவரும் பொற்றாமரையில் விழும்படி தெய்வத்தன்மை பொருந்திய திருக்குறட் புத்தகத்தி னளவாய்ச்சுருங்கி அதற்குமாத்திர மிடங்கொடுக்கக் கண்டவர்கள் யாவருங் களிகூர்ந்தனர் அவருட்சிலர் இது தெய்வீகமாகிய வேதமென்றுஞ் சிலர் அங்கங்களென்றுஞ் சிலர் ஞானநூலென்றுஞ் சிலர் ஆகமமென்றுஞ் சிலர் புராணங்களென்றுஞ் சிலர் வாலிபர் மதனாகமமென்றுந் தந்தமக்குத் தோன்றியவாறே சொல்லித்துதித்தனர் — அன்றியும் அநேக விசேஷமான தெலுங்காதி சாஸ்திரங்களும் கிரந்தமுதலான பாஷைகளிலிருக்கின்ற பலநூல்களும், இத்திருக்குறளினது பாயிரத்தினோர் பாடலின்பொருளுக்கு மொவ்வாதென்றும் இதுவே வித்வான்களுடைய பாக்கியமென்றும் இந்தப்பயன் அநேகமாயிரம் அகஸ்தியர்கள் ஒருருவாகிவந்து பாடப்பட்டதோ வென்றும் பலவித விலக்கண விலக்கியங்கட்கும் இஃதிலக்கத்தை யொக்குமென்றும் விஷ்ணுவானவ ரிவ்வுலகை இரண்டடியா லளந்தார் இதுவெல்லாருள்ளத்தையு மீரடியாலளந்ததென்றும் இது சட்சமயத்தார்க்கும் பொது நூலென்றும் உட்சமயத்துக்கே யுரிய நூலென்றும் இப்ப

டிக் கல்விமான்களும் அரசர்களும் மற்றவரும் கொண்டா டித் துதிக்கும்போது பொற்றாமரையில் விழுந்து தடுமாறி வருந்திய புலவர் நாற்பத்தொன்பதின்மரும் மிக்ககலங்கிக் கரையேறி நாயனாரையும் திருக்குறளையும் பணிந்து துதிந்து நாற்பத்தொன்பதின்மரும் நாற்பத்தொன்பது பாடல் அருளிச் செய்தனர். அஃது திருவள்ளுவமாலையெனப் பெயர் பெறும்.

அச்சங்கத்தாரும் உக்கிரப்பெருவழுதியென்னும் பாண்டியன் முதலானவர்களும் அத்யந்தம் ஆனந்தமடைந்து வெகு



பூசிதப்பண்ணி இந்நூலை அகஸ்தியரும் ஒப்புக்கொள்ளில் நல்ல தென்ன விடைபெற்று பொதியமலைக்குப்போய் அகஸ்தியர் முதலானவர்களைக்கண்டு தாஞ்செய்தநூலைக் காண்பிக்க அவர்கள் அடைந்த சந்தோஷத்தையும் புகழ்ந்தபாடலையும் அனந்தனாலுஞ் சொல்லமுடியாது அவ்விடத்தில் கொங்கண சித்தர் வழிபட அவருக்கநுக்கிரகித்து நாயனார் அவர்களிடத் தில் உத்தரவுபெற்றுத் தாம் முன்பு போம்போது வழியினேர் படாத ஸ்தலங்களையெல்லாந்தரிசனம்பண்ணிக்கொண்டு திரு மயிலைக்குச் சமீபமாக வருவதை அப்பதியாரும் ஏலேலசிங் கருங்கேள்விப்பட்டு எதிர்கொண்டுபோய் அழைத்துவந்தார் கள் அவரும்வந்து தமதில்லறத்தில் வாசுகியாரோடு மிருந் தார்

இப்படி இருக்கையில் ஒருபெரியவர் அவரில்லின்கட்சென் று ஸ்வாமீ இல்லறம் பெரிதோ துறவறம் பெரிதோ அடியே னுக்கநுக்கிரகிக்க வேண்டுமென்று பலநாள்பணிசெய்து கா

த்திருக்க நாயனர் அவருக்குத்தர மொன்றுஞ் சொல்லாமல அவரோ அமிர்தமேபோமபடி ஒருநாள் தமது வாசுகியென்னும மனையாள கிணறறில ஜலந்தூக்கிக்கொணடிருக்கையில அழைக்க அந்த மமாமா பாதிகிணறறளவினில தூக்கினகுடத்தை அப்படியே நிறகவிட்டு வந்ததையும் மறறொருநாள் அந்தமமாள் நாயனருக்குப் பழைய தூ பரிமாறி நிறகையில் நாயனமெனக்கிச்சாதஞ் சுடுகின்றதென - அந்தமமாள் சீக்கிரம் விசிறி கொணடு விசிறியதையும மமறொருநாள் நலலமத்தியான நயில்கிறிது மிருள னுககாவிடத்தில தாம நெய்யும்போது கையிலிருந்த குழல தவறி விழ்ந்ததை யெடுக்க மனையாளை நோக்கித் திபஙகொணடுவாவென்க் கொணடுவந்ததையும் - வந்திருந்தவர்கணடு இப்படிப்பட்ட மனையாள்வாய்க்கில இல்லறமே பெரிதென்றும - இல்லையேல துறவறமே பெரிதென்று மெணணிக்கொணடு ஒன்றுங்கேளாமற போய்விட்டார்

இப்படிநாயனருந் திருமனைவியும் இல்லறநடத்திவருங் காலத்தில வாசுகியமமாள் மோட்சமடையும்போது நாயனர்திருமுகக்குறிப்பாக - நாயனரும் எல்லென்னெரா என்னைமணஞ்செய்தவன்று தேவரீருக்கு யா னன்னம பரிமாறும போது



ஒருசிறுபாத்திரத்திற் சலமும் ஊசியும் வையெனக் கட்டளையிட்ட தின்னகாரணமெனத் தெரியவில்லையென்று வினவப்பஞ்செய்ய அதறகு நாயனர் அன்னம் புறத்திற சிதறில எடுத்துப் பரிசுத்தஞ்செய்வதற் கென்றுசொல்ல - உடனே மோட்சமடைந்தனள்

அப்போது நாயனார் சொல்லியது.

(வெண்பா)

அடிசிற்கினியாளே யன்புடையாளே ❋
படிசொறறவருத பாவா - யடிவருடிப் ❋
பின்றூங்கிமுன்னெழுந்த பேதையேபோதியோ❋
வென்றூமகுமென்க ணிரா . ❋

என்றருளி அந்தஅம்மாள் திருமேனியைச் சமாதிபண்ணி ஞர்—நாயனார் பின்னும் அநேகநாளிருந்து அநேக மகிமை களசெய்து ஏலேலசிங்கர் முதலாகிய சிஷர்களுககுப் பூரண அனுககிரகம்பணணிப் பின்பு ஏலேலசிஙகனையழைத்து நமக் குப் பரிபூரணதிசை நேரிட்டிருககின்றதால் நாம் பரிபூரண மானபின்பு நமதுதேகத்தைப் புரிகட்டி இழுதது ஊாககுப் புறத்தில புதாிறபோட்டுவிடுமென் றனுக்கிரகஞ்செய்து நிஷ் டைகூடிப் பரிபூரணமானவர்போ லிருககககணடு ஏலேலசிங் கா பொறபெட்டியிலவைத் தடககம்பணண வெத்தனிததத்தை அமிர் ததடனே நாயனார் விழித்துப்பார்த்து, அப்பா நான் சொன்னசொல்லை கடவாதையென்று அனுககிரகித்து உட னே பரிபூரணமானார் - ஏலேலசிங்கரும் நாயனா கட்டளைப் படி செய்யுமளவில், திருமேனியிற் சிதறிய தசைகளைக காக முதலானதுக எருந்திப் பொன்மயமானதைககணடு பெரிதா ன ஆச்சரியமடைந்து அவர் திருமேனி இருந்தவிடத் தாலய மெடுப்பித்துப் பூசித்துவந்தாகள்.



மேற்படி சரித்திரத்தி னுட்பட்ட பாட்டுகள் சொக்கநாதர் தருமியென்னும் பிராமணனுககு அருளிச்செய்த (திருமுகப்பாசுரம்)

அகவல்.

கொங்குதேர்வாழ்க்கையஞ்சிறைத்தும்பி *
காமஞ்செப்பாதுகண்டதுமொழிமோ *
பயிலியதுகெழீஇய்நட்பின் *
மயிலியற்செறியெயிறறரிவைகூந்தலி *
னறியவுமுளவோநீயறியும்பூவே *

சொக்கநாதர் - நக்கீரரைப்பார்த்துச் சொல்லியது.
(வெண்பா)

அங்கங்குலைய வரிவாளினெய்பூசிப் *
பங்கம்படவிரண்டு கால்பரப்பிச்-சங்கதனைக்
கீர்கீரெனவறுக்குங் கீரனோவெங்கவியை *
யாராயுமுள்ளத் தவன் *

சொக்கநாதரைப்பார்த்து-நக்கீரர் சொல்லியது
(வெண்பா)

சங்கறுப்பதெங்கள்குலஞ் சங்கரனார்க்கேதுகுலம். *
பங்கமறச்சொன்னால் பழுதாமே - சங்கை *
யரிந்துண்டுவாழ்வோ மரனேபின்போல . *
விரந்துண்டுவாழ்வ திலை *

சங்கத்தாரை வெல்லவேண்டி ஔவையாரைக்குறியாற் கைசை
கைகள்பண்ணி இவையென்னென்று கேடகச்
சங்கத்தார் சொல்லியது.

(வெண்பா)

இவ்வளவுகண்ணிரு ளிவ்வளவுசிறுமிடையா · *
ளிவ்வளவுபோன்ற விளமுலையா - ளிவ்வளவாய்க் *
காமத்தலைவனையுங் காணுதுகன்றிரு *
ளுமத்தைகாட்டுகுமி தன்கு · · *

இஃது—தகுதியான உத்தரவன்றென்று அக்குறிகளுக்கு ஔவை சொல்லியது.

(வெண்பா)

ஐயமிடுமி னறநெறியைக்கைப்பிடிமி · · *
னிவ்வளவேனும்மனத்தை யிட்டுண்மின் - தெய்வ

மொருவனேயென்ன வுணரவல்லீரோ *
லருவினைகளோத்து மறும் *

இப்படியென்று ஔவைசொல்லச் சங்கத்தார் நாணமுற்று இவனை வெலலப்படாதென்று திருவள்ளுவரைப் பார்த்து நீ எந்தவூ ரென்றதற்கு அவர் சொல்லியது

(வெண்பா)

எந்தவூரென்றீ ரிருந்தவூர்நீர்கேளீ *
ரந்தவூர்செய்தி யறியீரோ - வந்தவூர் *
முப்பாழும்பாழாய் முடிவிலொரு சூனியமா *
யப்பாலும்பாழா யறும் ,*

என்றிதுமுதலான ஞானார்த்தமான செய்யுட்களா லவர் வினவியவைகளுக் கெல்லாம் உத்தரவு சொல்ல, இவரையும வெலவ தரிதென்று இடைக்காடருடனே பேச அவர் சொல்லியது

(வெண்பா)

ஆற்றங்கரையி னருகிருந்தமாமரத்திற் *
காக்கையிருந்து கல்லுகல்லெனக் - காக்கைதனை *
யெய்யக்கோலில்லாம லிச்சிச்செனவெய்தான் *
வையக்கோனார்தன் மகன் *

இதுபோன்ற அனேகஞ்செய்யுட்களை அவர்களா லெழுதப்படாமலுங் கற்றுக்கொள்ளப்படாமலுஞ் சொல்ல நாணித் தோற்படைந்தார்கள்



# திருவள்ளுவ நாயனார்

சரித்திரவரலாறு முற்றிற்று.





உ

சிவமயம்.



நாயனாருளை

# திருக்குறளதிகாரஸ்வரூபசூசகம்.

## அறத்துப்பால்.

திருவள்ளுவமாலையுள்- எறிச்சலூர்மலாடனார்
அருளியஅறப்பால் அதிகாரத்தொகை

வெண்பா

பாயிரநான் கில்லற மிருபான் பன்மூன்றே. . ...*
தூய துறவறமொன் றூழாக - வாய .. ... . *
வறத்துப்பா னால்வகையா வாய்ந்துரைத்தா னூலின் *
திறத்துப்பால் வள்ளுவனார் தேர்ந்து . ........... ....*

# முதல் இயல்-பாயிரம்.

## முதலாம் - அதிகாரம் - கடவுள் வாழ்த்து.

"கவி,, தான் வழிபடுகடவுளையாதல், எடுத்துக்கொண்ட பொருட்கு ஏற்புடைக்கடவுளையாதல், வாழ்த்துதல். அவற்றுள் இவ்வாழ்த்து ஏற்புடைக்கடவுளையெனவறிக [என்னை,சத்துவ முதலிய குணங்களான் மூன்றாகிய வுறுதிப்பொருட்கு. அவற்றான் மூவராகியும், முதற்கடவுளோ டியைபுண்டாகலான் அம்மூன்றுபொருளையும் கூறலுற்றார்க் கம்மூவரையும்வாழ்த்துதன்முறைமையாகலின், இவ்வாழ்த்து அம்மூவர்க்கும்பொதுப்படக் கூறினாரெனவுணர்க.]

## ௨-ஆம்-அதி- வான்சிறப்பு.

மழையினது சிறப்பு (அஃதாவது) கடவுளது ஆணையால் உலகமும், அதற்குறுதியாகிய அறம்பொருளின்பங்களும்,



டத்தற் கேதுவாகியது மழையாதலால—அதன் சிறப்பைச் சொல்லுதல.

—௩-ஆம்- அதி- நீத்தார்பெருமை

முற்றத்துறந்த முனிவரது பெருமை அவ்வற முதலாகிய பொருள்களையுலகத்தார்க்குள்ளவா றறிவிப்பவரவராதலால்—இது வான்சிறப்பின் பின் வைக்கப்பட்டது.

௪-ஆம்-அதி-அறன்வலியுறுத்தல்.

அம்முனிவராலறிவிக்கப்பட்ட மூன்றனுள் அறமானது-மற்றப்பொருளின்பங்களைப்போலாகாமல், இம்மை - மறுமை- வீடு- என்கிற மூன்றையுந்தருதலால், அவற்றினும் உறுதியுடைத்தென்பது சொல்லுதலால்— அதிகார முறைமையு மிதனால் விளங்கும்.

௨ - வது இல்லறவியல்

இல்லறமாவது - இல்வாழ்க்கை நிலைக்குச் சொல்லப்படுகிற வழியிலேநின்று அதற்குத்துணையாகிய கற்புடைய மனைவியோடு கூடிச்செய்யப்படுவதாம்—ஆதலின், அதனை முதலிலே சொல்லத்தொடங்கினார்

---

முதல்-ஆம்-அதி இல்வாழ்க்கை.

(அஃதாவது) மனையாளோடுகூடி வாழ்தலினது சிறப்பு. இவ்வாழ்க்கை நிலையானது அறஞ்செய்தற்குரிய இருவகைநிலைகளுள்ளே முதலாதலின—இது, அறன்வலியுறுத்தலின்பின் வைக்கப்பட்டது.

௨-ஆம்- அதி-வாழ்க்கைத்துணைநலம்.

அவ்வில்வாழ்க்கைக்குத் துணையாகிய மனையாளது நன்மை— இதனாலே அதிகாரமுறைமையும் விளங்கும்.

௩ ஆம்- அதி- புதல்வரைப்பெறுதல்.

முநிவர்கடன் கேள்வியாலும், தேவர்கடன் வேள்வியாலும் தென்புலத்தார்கடன் புதல்வரைப்பெறுதலாலுமல்லது செலுத்தக்கூடாமையால் - அக்கடன் செலுத்தற்பொருட்டு நல்ல மகவைப் பெறுதல் - அதிகார முறைமையில் முன் வைக்கப்பட்டது.

திருக்குறள் திகாரங்களின் முறைவைப்பு

எஉ-ஆம்-அதி-அன்புடைமை.

அம்மனைவி புதல்வர் முதலியோர் சம்பந்த முடையவரிடத்து ஆசையுடையவனாயிருக்கை - அதிகாரமுறைமைய பின்னுவின்கூம். [இல்லறத்தினின்று நடத்தலும் பிறவுயிர்களின்மேல் அருள்பிறத்தலும், அன்பின் பயனாதலால் இது வேண்டப்பட்டது.]

ரு-ஆம்-அதி- விருந்தோம்பல்.

விருந்தினரையுபசரித்தல் - தென்புலத்தார் - தெய்வம் - விருந்தினர் - சுற்றத்தார் - தான் - என்கிற ஐவகையோரை - உபசரித்தல்களிலே முன்னவையிரண்டும் கண்ணாற் காணப்படாது அவரை நினைத்து செயப்படுவனவாதலாலும் - பின்னவையிரண்டும் - பிறர்களுக்கொடுத்த லல்லாமையாலும் - நடுநின்ற விருந்தோம்பல் சிறப்பையுடையதாகி - அவ்வில்லறங்களுக்கு முதலாயிற்று வேறுபாடில்லாத அன்பையுடைய கணவனும் மனையாளுங்கூடியல்லது - செய்யக்கூடாமையால் இது அன்புடைமையின் பின்வைக்கப்பட்டது.

கூ-ஆம்-அதி- இனியவைகூறல்.

மனதிலுள்ள மகிழ்ச்சியை வெளிப் படுத்துகிற - இனிய சொல்லுகளைச்சொல்லுதல்.—இதுவும் - விருந்தோம்புவார்க்கு அவசியம் வேண்டுவதாகலின் அதன்பின்வைக்கப்பட்டது.

௭-ஆம்- அதி- செய்நன்றியறிதல்.

தனக்குப் பிறர்செய்த நன்றியைமறவாமை. இனியசொற்களைச்சொல்லி இல்லறத்தின் வழுவாதவர்க்கு - நன்றிமறத்தல் பெருங்குற்றமாதலின்,இதனை நீக்குதற்பொருட்டு அதன்பின் வைக்கப்பட்டது

௮-ஆம்-அதி-நடுவுநிலைமை.

பகைவர் - அயலோர் - நட்பினோர்-இம்மூவகையோரிடத்தும் அறத்தின் வழுவாமல் ஒப்பநிற்கு நிலைமை. இது- நன்றி செய்தவிடத்து அந்நன்றியை நினைத்தவிடத்தே கெடுமென்றே அவ்விடத்தும் கெடலாகாதென்றற்கு—இதுசெய்நன்றியறிதலின் பின்வைக்கப்பட்டது.

௯-ஆம்-அதி- அடக்கமுடைமை.

காயமும் - வாக்கும் - மனமும் - தீயவழியிலேசெல்லாமல் அடக்குதலுடையவனாயிருத்தல்.—இது பிறர்குற்றம்போலத்



தங்குற்றங்காணும் நடுவுநிலைமையுடையவனுக்கு உரித்தாதலால் அந்நடுவுநிலைமையின் பின்வைக்கப்பட்டது.

௰ ஆம்-அதி- ஒழுக்கமுடைமை

தங்கள் - தங்கள் - வருணாசிரமங்களுக்குச் சொல்லப்பட்ட ஆசாரத்தை யுடையவனாயிருக்கை. இது காயமுதலானவையடங்கினவாகவல்லது முடியாதாகலின் —அதன்பின்வைக்கப்பட்

௰௧-ஆம்- அதி- பிறனில்விழையாமை

காமமயக்கத்தாற் - பிறர்மனைபாலே விரும்பாமை — இது - ஒழுக்கமுடையவரிடத்தே யுண்டாகுவ தாகலின் அதன்பின் வைக்கப்பட்டது

௰௬-ஆம்- அதி- பொறையுடைமை.

காரணம்பற்றியாவது - அறியாமையாலாவது - தமமிடத் திற்குத்தீங்குசெய்தவிடத்துத் தாமுமதனையவரிடத்திற் செய்யாது பொறுத்தலுடையராதல் — இது பிறனில விழையாமை போல அவசியம்வேண்டுவதாதலின் - அதன்பின் வைக்கப்பட்டது

௰௭-ஆம்- அதி- அழுக்காறாமை

பிறர்செல்வ முதலியவை கண்டவிடத்துப் பொறாமைப்படாமை—இப்பொறாமையும்பொறுமைக்கெதிரியதாதலின் இதனைவிலக்குதற் கிது பொறையுடைமையின் பின்வைக்கப்பட்டது.

௰௮-ஆம்- அதி - வெஃகாமை.

பிறர்பொருளை வௌவுதற்கு நினையாமை—பிறருடைமை கண்ட விடத்துப்பொறாமைப்படுதலேயன்றி அதனைத் தான் வௌவுதற்கு நினைத்தலுங்குற்றமென்றற் கிது அதன்பின்வைக்கப்பட்டது.

௰௯-ஆம்- அதி- புறங்கூறாமை.

பிறரைக்காணாவிடத்து இகழ்ந்து பேசாமை.—வாக்கின் குற்றம் - மனக்குற்றத்தின் வழியாகத்தோன்றலால் இது- அழுக்காறாமை வெஃகாமைகளின் பின்வைக்கப்பட்டது.

திருக்குறளதிகாரஸ்வரூபப்ரகாசகம். ௫

௨௰ ஆம்-அதி- பயனிலசொல்லாமை

தமக்காவது- பிறர்க்காவது-அறம்பொருளின்பங்களிலொன்றை பேறுந்தராதசொற்களைச்சொல்லாமை பொய்-குறளை-கடுஞ்சொல் - பயனிலசொல் - என - வாக்கினிடத்தேயுண்டாய் நாலகினுள் - பொய்துறந்தோர்க்கல்லது பற்றறவிடககூடாமையால் - அதனையொழித் தில்வாழ்வாரால் விடககூடுமவையாகிய மற்றைமூன்றினுள் - கடுஞ்சொல் இனியவைகூறலாலும் - குறளைபுறங்கூறாமையாலும், விலககிநின்றபயனிலசொலலைஇதனால் - விலககுகின்றமையால் — இதுபுறங்கூறாமையின் பின்வைககப்பட்டது.

௧௨-ஆம்-அதி-தீவினையச்சம்

பாவங்களாயுள்ளவைகளைச் செய்தற்கு அஞ்சுதல் இதனால் - காயத்தினிடத்தே விளைகின்ற பாவங்களையெல்லாந் தொகுத்து விலககுகின்றமையால— இதுபயனிலசொல்லாமையின் - பின்வைக்கப்பட்டது

௧௩-ஆம-அதி-ஒப்புரவறிதல்.

உலகநடையை யறிந்துசெய்தல் (மேலேவாகுக் - காயங்களால் செய்யத்தகாதவைமுன்சொல்லினார்) இனிசெய்யத்தகுமவைகளில - முன்சொல்லப்பட்டவற்றுள - அடங்காதவைகளைச்சொல்லுகின்றார் - ஆகையால் - இது - தீவினைடச்சத்தின் பின்வைக்கப்பட்டது.

௧௪ ஆம்- அதி-ஈகை.

வறியவராய் இரந்தவர்க்கு இலலையென்னமல் - கொடுத்தல் இது - மறுமையைக்குறித்தாகலின்—இடமையைக்குறித்த- ஒப்புரவறிதலின் - பின்வைக்கபபட்டது.

௧௫- ஆம்-அதி-புகழ்

இல்வாழ்க்கை முதலாகை யிருக்கச்சொல்லப்பட்ட - இல்ல

[௫]

திருக்குறளதிகாரஸங்க்ரஹம்.

றத்தில் தவறாதவர்க்கு இம்மைப்பயனாகி இவ்வுலகத்திலேசெய்தபடியே நிற்பதாகிய - கீர்த்தி — இது - பெரும்பாலும் - ஈகை பற்றிவருதலால் அதன்பின்வைக்கப்பட்டது.

௩-ஆவது துறவறவியல்.

துறவறமாவது - முன்சொல்லப்பட்ட இல்லறத்தின்வழுவாதொழுகி அறிவுடையராய்ப்பிறப்பினையஞ்சி முத்திபெறுதற் பொருட்டுத்துறந்தவர்க்குரித்தாகிய அறமாம் (விரதம்) அது - விரதம் - ஞானம் - எனவிருவகைப்படும் - விரதமாவது வினைமாசுநீங்கி அந்தக்கரணங்கள் பரிசுத்தமாதற்பொருட்டு - இன்னஅறங்களைச்செய்வேனென்றும் - இன்னபாவங்களை விடுவேனென்றும் - தமதுவல்லமைக்கேற்க - அளவுசெய்து கொண்டு - துறந்தோராலே - காப்பாற்றப்படுவது - அவ்விரதங்கள் - அளவிலவாயினும், அவைபலவற்றையுந்தமமுண்டாக்கித்தருஞ் சிறப்புடையசிலவற்றையிங்கே சொல்லத்தொடங்கிமுதலிலே - அருளுடைமையைச் சொல்லுகின்றார்.

முதல்-ஆம் அதி-அருளுடைமை

தொடர்பு - பற்றுமல் இயல்பாக - எல்லாவுயிர்களின்மேலுஞ்செல்வதாகிய கருணையையுடையராதல் - இல்லறத்தார்க்கு அன்புடைமைபோல் — இது - துறவறத்தார்க்குச்-சிறத்தலாற்-முன்வைக்கப்பட்டது.

உ-ஆம்-அதி-புலான்மறுத்தல்.

ஊனுண்ணுதலை யொழித்தல்- இது - கொலைப்பாவத்தை

ப்பின் உண்டாககலால் அதற்குக்காரணமாதலையும், மூன்றும
சொல் வருதலால் அதன்காரியமாதலையும், ஒருசேரஉடைத்தா
கிய ஊனுணுகல் அருளுடையார்களையவதன்றாகலின் அ
தன்விலக்குதற்கு - அருளுடைமையின் பின்வைக்கப்பட்டது

கூ-ஆம்-அதி-தவம்.

மனம் - பொறிவழிச்செல்லாது நிற்றற்குவிரதங்களினாலே-
உண்டிசுருங்குதல முதலானசெயல்களை மேற்கொண்டுஅவை



களாற்றம்முயிர்க்குறுந் துன்பங்களைப் பொறுத்தும், பிறவுயிர்
களைக்காப்பாற்றல் - புலாலுண்ணுதலுயிர்கண்மேலருண்டுண்டாகின்
ற இடத்தேசெய்யப்படுவதாகலின் - ஈதகன்பின்வைக்கப்ப
ட்டது

ச-ஆம்-அதி-கூடாவொழுக்கம்

(காம்) விட்டகாமவின்பத்தை உறுதியில்லாமையாலே பின்
னும விரும்புமவழி தோன்ற அவ்வழிமேற்கொண்டுநின்று, தவ
த்தோடு பொருந்தாதாகிய தீயவொழுக்கம் — ஆதலினிதுத
வத்தின் - பின்வைக்கப்பட்டது

ரு-ஆம்-அதி கள்ளாமை

பிறருடைமையாயுள்ளவைகளில் யாதொருபொருளையும் அ
வரைவஞ்சித்துக்கொள்ள நினையாமை நினைத்தலுஞ்செய்தற்குச்
சமானமாதலால் கள்ளாமையெனலாயிற்று இல்லறத்தாருக்
குத் தமமவரோடுவினையாட்டாக வரவுதுசெய்யககூடும் - து
றவறத்தாருக்கு நினைத்தவிடத்தும் பெரியகுற்றமாதலின் புற
த்திலே போகாமல்மடங்கி ஒரிடத்தை யுற்று உயிரோடுகூட

வேண்டியதாகிய அவசரமானம அதைவிடுப்பதற்கிலேபோ ய்ப் பலவிடத்தையுற்று உடம்பின்பொருட்டு பொருளைநோ க்குதலல்லாமலும், அப்பொருளையும் வஞ்சித்துக்கொள்ள நி னைத்தல அவருக்குப்பெரியகுற்றமாதலஅறிக இவ்விதமவாய் மைமுதற்கொல்லாமை முடிவாகிய நான்கறத்திற்கும ஒக் கும்—இது பொருளைப்பற்றி யுண்டாங் குற்றத்தை விலக்குவ தாகலின் காமம்பற்றியுண்டாங்கூடாவொழுக்கத்தின் பின்வை க்கப்பட்டது.

௬-ஆம்-அதி-வாய்மை.

மெய்யினது தன்மை-பெரும்பாலும் காமமும் பொருளும் பற்றி யுண்டாவதாகிய பொய்மையை விலக்கலால்—இது- கூ டாவொழுக்கங்கள்ளாமைகளின் பின்வைக்கப்பட்டது.

௭-ஆம்-அதி-வெகுளாமை.

கோபஞ்செய்தற்குக் காரணமாகியகுற்றம் ஒருவனிடத்தே

திருக்குறளதிகார [illegible] பருக்கம்.

யுண்டாகிய விடத்தும், கோபஞ்செய்யாமை —இது பொய் மைபற்றி யுண்டாங்கோபத்தை விலக்கலால் வாய்மையின்பின வைக்கப்பட்டது

௮-ஆம்-அதி-இன்னாசெய்யாமை.

தனக்கொருபயனைக்குறித்தாவது வைரம்பற்றியாவது ஒரு யிர்க்குத் துன்பந்தருமவைகளைச்செய்யாமை அவைகளைச்செ ய்தல்வெகுளியொழியவும் உண்டாமென்பதையறிவித்தற்கு— இதுவெகுளாமையின பின்வைக்கப்பட்டது.

௯-ஆம்-அதி-கொல்லாமை

ஐயறிவுடையவைமுதல ஓரறிவுடையவை யீறாகிய உயி ர்களைச் சோர்விலுங்கொல்லுதல் செய்யாமை இதுமுன் சொல்லப்பட்ட அறங்களெல்லாவற்றினுஞ்சிறப்புடைத்தாய்ச்

சொல்லாது ஒழிந்தமற்றையவறங்களையெல்லாம அரசனுட
க்கி திறகையால் --இறுதியிலவைக்கப்பட்டது

## ஞானம்.

ஞானமாவது அவ்விரதங்களினாலே காரணங்கள் பரிசுத்தமா
னவிடத்துஉண்டாவதும், மோட்சத்தைத்தருவதுமாகிய அறி
வு- அது நிலையாமைமுதல் அவாவறுத்தல் இறுதியாக நான்க
திகாரத்தானடக்கிச்சொல்லப்படுகின்றது

### ௰ ஆம்-அதி-நிலையாமை.

தோற்ற முடையவையெல்லாம நிலைபெறுதன்மை. இது
அறிந்தவிடத்தே யல்லாமல்பொருள்களிலே பற்றுவிடாதா
கலின முன்வைக்கப்பட்டது

### ௰௪-ஆம்-அதி-துறவு

புறமாகியசெல்வத்திலும், அகமாகிய உடம்பிலும், உண்
டாகியபற்றை அவைகளது நிலையாமையைப்பார்த்துவிடுதல்,
அதிகாரம்வைத்தமுறையும் இதுகுவிளங்கும்.



### ௰௨-ஆம்-அதி-மெய்யுணர்தல்.

பிறப்புவீடுகளையும், அவற்றின் காரணங்களையும்,
திரிபு விபரீத * சந்தேகங்களால் அல்லாமல் உண்மையால்
அறிதல் — இதை வடநூலார் தத்துவஞான மென்பர்.—
இதுவும் பற்றற்றான் பற்றினைப் பற்றியவிடத்தே யுண்டாவ
தாகையால் அக்காரணவொற்றுமைபற்றி துறவின்பின் வைக்
கப்பட்டது.

‡ விபரீதஞானமாவது ஒன்றை மற்றொன்றாக வறிதல்- அது கயிற்றைப் பாம்பென்றறிதல் போல்வன.

* சந்தேகஞானமாவது ஒன்றை இதுவோ அதுவோ வெனக்கொள்ளுதல்.

அது கயிறோ பாம்போவெனத்துணியாது நிற்பது போல்வன.

ம௩-ஆம்-அதி-அவாவறுத்தல்.

மூன்றும் பின்னும் வினைத்தொடர்பறுத்தார்க்குநபுதின்ற வுடம்பும் அதுகொண்டவினைப்பயன்களுமதின்றமையால்அதுபற்றி ஒரோவிடத்துத்துறக்கப்பட்டபுலன்களின் மேலே பழைய பழக்கவசத்தினாலே நினைவுசெல்லுமன்றே அந்நினைவும் பிறவிக்குவித்தாமாகலால அதனை இடைவிடாதமெய்ப்பொருளுணர்வால்அறுத்தல்—அதிகாரமுறைமையுமிதனால்விளங்கும்.

ம௪-ஆம்-அதி-இயல்-ஊழ்

நல்வினைப்பயனாகியஇன்பமும், தீவினைப்பயனாகிய துன்பமும், அவ்வினைகளைச்செய்தவனையே சென்றடைவதற்கேதுவாகியநியதி. (ஊழ்-பால்-முறை - உண்மை-தெய்வம் நியதி-விதி - என்பவைஒருபொருட்சொற்கள்) இதுபொருள் இன்பங்கள் இரண்டற்கும்பொதுவாய்ஒன்றனுள் வைக்கப்படாமையாலும், சொல்லப்பட்டஅறத்தோடு சம்பந்த முடைமையாலும், அதனிறுதியில்சொல்லப்பட்டது

ஆக-அதிகாரம்-௩௮.



# அறத்துப்பால்.

முற்றிற்று.



உ

சிவமயம்.

நாயனாதுணை

இரணடாவது

# பொருட்பால்.

திருவள்ளுவமாலையுள் - தொடித்தலைவிழுத்தண்டினார்
இயற்றிய - இயற்றொகை

வெண்பா

அறநான்கறிபொருளேழொன்றுகாமத் *
திறமூன்றெனப்பகுதிசெய்து-பெறலரிய .. *
நாலுமொழிந்தபெருநாவலரோநல்குணர்வார் . *
போலுமொழிந்தபொருள் ... ... *

திருவள்ளுவமாலையுள்போக்கியார்அருளியபொருட்பால்
அதிகாரத்தொகை.

வெண்பா

அரசியலையைந்-தமைச்சியலீரைந் . . *
துருவலரணிரண்டொன்றுகூ-ழிருவிய *
திண்படைநட்புப்பதினேழ்குடிபதின்மூன் *
றென்பொருளேழாமிவை .. ... ... *

*——*——*

# முதலாவது - அரசியல்.

முதல் ஆம்-அதி- இறைமாட்சி.

(அஃதாவது) அரசனது நற்குண நற்செய்கைகள்

உ-ஆம்-அதி-கல்வி.

(அவ்வரசன்) கற்றற்குரிய நூல்களைக் கற்றல். அவையாவன- அறநூல் - நீதிநூல் - (தேர்-யானை-குதிரை-படைக்கலம்) எனப்பட்ட இவற்றினூல்களும்.



௩-ஆம்-அதி-கல்லாமை

கற்றலைச்செய்யாமையின்இழிவு. முற்கூறியகல்வியின் சிறப்புமுடிவுபெறுமைநோக்கி எதிர்மறையாலும், கூறலாகிய கல்லாமையை அதன்பின்வைக்கப்பட்டது

௪-ஆம்-அதி-கேள்வி

கேட்கத்தகுநூலின்பொருள்களைக் கற்றறிந்தவர் சொல்லக்கேட்டுதல் கற்றவிடத்தே அதனாலாகிய அறிவை புலப்படுத்தலாலும, கல்லாதவிடத்தும் அதனையுண்டாக்கலாலும, இது கல்வி - கல்லாமைகளின் பின்வைக்கப்பட்டது.

௫-ஆம்-அதி-அறிவுடைமை

கலவி கேள்விகளினாலாகிய அறிவோடு உண்மையறிவுடையனாதல். அதிகாரமுறைமையும் இதனாலவிளங்கும்.

௬-ஆம-அதி-குற்றங்கடிதல்

காமம் - குரோதம் - உலோபம் - மானம் - உவகை- மதம்- (என்னப்பட்ட ஆறுகுற்றங்களையும் அரசன்றன்னிடத்தேதோன்றாமல்கடிதல —இவைகளைக குற்றமென்றறிதலும் கடிதலும்

அறிவுடையாரைக்கலந்து மற்றையர்க்குக்கூடாமையால், ஈது அதன்பின் வைக்கப்பட்டது.

## ௪-ஆம்-அதி-பெரியாரைத்துணைக்கோடல

(அவ்வறுவகைக் குற்றங்களேயுங்கடிந்த அரசனைதன்னைநீதி வழியில்விலக்கி நல்வழியிற் செலுத்தும்) (பேரறிவுடையவரைத்தனக்குத் துணையாக்கிக்கொள்ளுதல். அதிகாரமுறைமையும் இதனால்விளங்கும். [பேரறிவுடையார் அரசாட்சிக்குக்குற்றம்வாராமற் காத்தற்குரிய அமைச்சர்-புரோகிதர்]

## ௮ ஆம்-அதி-சிற்றினஞ்சேராமை

சிறியவினத்தைப்பொருந்தாமை சிறியவினமானது-நல்லதிலேறுதன்மையுந் தீயதில தீமையுமில்லையென்பாரும், விடரும தூர்த்தரும முதலானகூட்டம். அறிவை வேறுபடுத்தி இருமையுங்கெடுக்கும்இயல்பினதாகிய இதனைப்பொருந்தினால், பெரியாரைத்துணைக்கோடல், பயனில்லையென்பதறிவித்தற்கு ஈது தன்பின் வைக்கப்பட்டது.

திருக்குறளதிகாரஸ்வரூபதருசகம்.

## ௯-ஆம்-அதி-தெரிந்துசெயல்வகை.

அரசன் தான்செய்யுந்தொழில்களை ஆராய்ந்துசெய்யுந்திறம். அச்செயல் - பெரியோரைத்துணைக்கோடல் - பயனுடைத்தாயவிடத்து அவருடன் செய்யப்படுவதாகலின்— இது சிற்றினஞ்சேராமையின் பின்வைக்கப்பட்டது.

## ௰-ஆம்-அதி-வலியறிதல்.

(அவ்வுபாயங்களுள் - தண்டஞ்செயக்குறித்த அரசனவன்) வினைவலி - தன்வலி - மாற்றான்வலி - துணைவலி-என்னும்

நால்வகை வலிவகைளையும், அளந்துஅறிதல் அதிகாரமுறை மையும் இதனால்விளங்கும்.

### ௰௧-ஆம்-அதி-காலமறிதல்

வலிமையினாலே மிகுதியுடையவனும்பகைவன்மேற்போர்க்குச்செல்லுமாசன்ஏற்றகாலத்தினையறிதல். அதிகாரமுறைமையும் இதனால்விளங்கும்.

### ௰௨-ஆம்-அதி-இடனறிதல்.

வலியுங்காலமுமறிந்து பகைமேற்செல்வோன்தான்வெல்லுதற்கேற்ற நிலத்தினையறிதல். அதிகாரமுறைமையும் இதனால் விளங்கும்.

### ௰௩-ஆம்-அதி-தெரிந்துதெளிதல்.

(மந்திரிமுதலானவர்களைப் - பிறப்பு - குணம் - அறிவு-என்பபடுகின்றவைகளையும், செய்கையையும், காட்சி-கருத்து-ஆகமம் - என்கின்றபிரமாணங்களினாலே ஆராய்ந்து தெளிதல் வலிமுதலாகிய மூன்றையுமறிந்து பகைமேற்செல்வோனுக்குச்சேனைகருத்தோடு தொழில்செய்தற்கும, எதிரிடாமைக்கும் - இதுதெளிவுவேண்டுதலால் அவைகளின்பின் வைக்கப்பட்டது.

(௫௨-ஆம்-அதி-தெரிந்துவினையாடல்)

அத்தெளியப்பட்டவரை, அவர்செய்யவல்ல தொழில்களையறிந்து அவைகளிலேஆளுந்திறம், அதிகாரமுறைமையுமிதனுல்விளங்கும்

(௫௩-ஆம்-அதி-சுற்றந்தழால்)

அரசன்-தனதுசுற்றத்தாரைத்தன்னை விட்டுநீங்காதிருக்கும்படித்தழுவுதல [தொழில்செய்வாரைச்சொல்லி மற்றைச்சுற்றத்தாரைச்சொல்லுதலால் இதுதெரிந்துவினையாடலின் பின்வைக்கப்பட்டது

(௫௪-ஆம்-அதி-பொச்சாவாமை)

அழகு செலவம்-ஆற்றல்- முதலானவைகளால் மகிழ்ந்து தன்னைக்காத்துக்கொள்ளுதலிலும், பகையழித்தல்முதலாகியகாரியங்களிலும், மறதிசெய்யாமை முன்சொலலப்பட்ட சுற்றத்தாரால்பயனுள்ளது இம்மறதியில்லாவிடத்தாதலால் இது சுற்றந்தழாலின்பின்வைக்கப்பட்டது

(௫௫ ஆம்-அதி- செங்கோன்மை)

அரசனாற்செய்யப்படுமுறையினதுதன்மை அந்தமுறையானது ஒருபக்கத்திலேசாயாமல செவ்வையாகிய கோல்போலுதலாலே செங்கோலெனப்பட்டது அது மறதியிலலாதஅரசனாற் செய்யத்தக்கதாதலா லிது பொச்சாவாமையின் பின்வைக்கப்பட்டது

(௫௬ ஆம்-அதி-கொடுங்கோன்மை)

அம்முறையினது கோணுதற்றன்மை இது செங்கோன்மைக்குமாறுதலால் அதன்பின்வைக்கப்பட்டது

(௫௭-ஆம்-அதி வெருவந்தசெய்யாமை)

குடிகள் அஞ்சுவதும், பகுதியென்று சொல்லப்படுகின்ற மந்திரிமுதலாகிய அங்கங்கள் அஞ்சுவதும், தான் அஞ்சுவதும் ஆகிய தொழில்களைச்செய்யாமை, அவைசெய்தல் கொடுங்கோன்மையிலேசேர்தலால் அதன்பின்வைக்கப்பட்டது

(௫௮-ஆம்-அதி-கண்ணோட்டம்)

தன்னோடுபழகினவரைக்கண்டால், அவராலேசொல்லப்பட்டதை மறுக்கமாட்டாமை இது அவர்மேலேகண்ணோடுகையினிடத்



து நிகழ்வதாகலால் அப்பெயர்பெற்றது [தாக்ஷிண்ணியம் முகம்பார்த்தல்என்றுசொல்லப்பட்டது]

(௫௯-ஆம்-அதி-ஒற்றாடல்)

பகைவர்-அயலோர் நட்பினர் என்னுமூன்று திறத்தாரிடத்தும் நிகழ்ந்தவையறிதற்கு ஒற்றரை ஆளுதல் முன்சொல்லப்பட்ட இவ்விரண்டுமுடைய அரசனுக்குத் தன்னாடுகாக்கும்போதும் பிறநாடுபிடிக்கும்போதும் வேண்டுமாகையாற்சொல்லத்தொடங்கினாராதலால் அவ்விரண்டுகாரியங்களுக்கும்அவசியமவேண்டியதாகிய இது முன்னேவைக்கப்பட்டது

(௬௦-ஆம்-அதி ஊக்கமுடைமை)

மனமானது தொழில்செய்தலிலே எழுச்சியையுடைத்தாதல் ஒற்றரால் நடந்தவையறிந்து அவைகளுக்கேற்ற தொழில் செய்வோனுக்கு இது அவசியம்வேண்டுதலால் அதன்பின் வைக்கப்பட்டது

(௬௧-ஆம்-அதி மடியின்மை)

நீண்டகாலம் வினைகளைச்செய்யும்போது சோம்புதல் இல்லாமை ஊக்கமுடையவருக்கு ஒரோவிடத்தே குணமாதலாற் சோம்பல்வருதலைக்குறித்து இது அதன் பின்வைக்கப்பட்டது

(௨௪ ஆம்-அதி- ஆள்வினையுடைமை)

இடைவிடாதமெய் முயற்சியை உடையனாதல் அதுஆண்மினையெனக்காரியத்தாற் சொல்லப்பட்டது சோம்பலைக்கெடுத்தலும், தொழிலை முயற்சியல்லாமல் ஆளக்கூடாமையினாலே இது மடியின்மையின் பின்வைக்கப்பட்டது

(௨௫ ஆம் அதி இடுக்கணழியாமை)

தொழிலைமுடிப்பவன் ஊழினாலாவது, பொருளில்லாமையினாலாவது, பகைவருத்தத்தினாலாவது, தனக்குத் துன்பம் வந்தவிடத்து அதற்கு மனங்கலங்காமை. அதிகார முறைமையும் இதனால் விளங்கும்





## இரண்டாவது—அங்கவியல்.

இது "இராசாங்கம்" அஃதாவது அமைச்சு- அரண்- கூழ் படை நட்பு- குடி ஆகிய (அரசருக்குரிய) அங்கம் (௬) அவையுள்

முதல்- அங்கம்- அமைச்சியல்

(௧-ஆம்-அதி அமைச்சு)

அமைச்சனது தன்மை. அத்தன்மை அவன் குணங்களும், செய்கைகளும்

(௨-ஆம்-அதி-சொல்வன்மை)

தான் நினைத்ததொழின்முடியும்வழியால் வார்த்தைசொல்லவல்லவனாதல் முன்னதிகாரத்திலே ஒருதலையாச் சொல்லுமென்றதையே சிறப்புப்பற்றிவிரித்துச்சொல்லுதலால் அதனைப்பின் வைக்கப்பட்டது

(௩-ஆம்-அதி-வினைத்தூய்மை)

செய்யப்படுந்தொழில்கள் பொருண்மாத்திரமல்லாமல் அறமும் புகழுந்தருவன நல்லவையாதல். சொல்லேயல்லாமற் செயலும் நன்றாகவேண்டுமென்கின்றமையால் இதனைப்பின்வைக்கப்பட்டது

(௪-ஆம்-அதி-வினைத்திட்பம்)

அப்பரிசுத்தமாகிய தொழிலை முடிப்பவனுக்குவேண்டுவதாகிய மனவலிமை அதிகாரமுறைமையுமிதனால்விளங்கும்

(௫-ஆம்-அதி-வினைசெயல்வகை)

அவ்வலிமையுடைய மந்திரியானவன் அதுதொழிலைச்செய்யுந்திறம் அதிகாரமுறைமையும் இதனால்விளக்கும்

(௬-ஆம்-அதி-தூது)

பொருத்தல் பிரித்தல்களுக்கு வேற்றரசரிடத்துச் செல்லுவாரது தன்மை அவ்விரண்டனையும், முன் செயல் வகையென்றமையால் ஈது அதன்பின் வைக்கப்பட்டது—[தான் வகுத்துச்சொல்வோன், சொல்லியது சொல்வோன், எனத் தூது இருவகைப்படும் அவருள் - முன்னோன் மந்திரியோடு சமானனுவானுகலானும், பின்னோன் - அவனிலெல்லாற்பங்கு குணக்குறைந்தோனுவானும்- இஃது அமைச்சியலுள்வைக்கப்பட்டது]



(எ-ஆம்-அதி- மன்னரைச்சேர்ந்தொழுகல்)

மந்திரியரசனைப்பொருந்திநடக்கும்விதம்—இது "வேந்தவாம் பண்புடைமை" எனமுன்சொல்லப்பட்டமையால் அதின் பின் வைக்கப்பட்டது.

(அ-ஆம்-அதி குறிப்பறிதல்)

அரசர் நினைத்ததை அவர் சொல்லாமலறிதல்—இவைமன்னரைச்சேர்ந்து நடப்பவர்க்கு அவசியமானதாகலால் அதன்பின் வைக்கப்பட்டது

(க-ஆம்-அதி-அவையறிதல்)

அரசனோடிருந்த சபையியல்பையறிதல்—காரியஞ்சொல்லுங்கால் அவன் குறிப்பறிதலேயல்லாமல் இதுவும் வேண்டுதலால் அதன்பின் வைக்கப்பட்டது

(ய-ஆம்-அதி-அவையஞ்சாமை,)

சொல்லுதற் குரிய சமையமறிந்து சொல்லுங்கால் அதற்கு அஞ்சாமை — அதிகாரமுறைமையுமிதனால் விளங்கும

—*—

## இரண்டாம் அங்கம் அரண் இயல்

(முதல்-ஆம்-அதி-நாடு)

அவ்வரசனாலும், மந்திரியராலும், கொண்டுசெலுத்தப்படுவதும் மற்றை அரணமுதலிய அங்கங்களுக்கு அவசியம்வேண்டுவதும் ஆகிய நாடு — அதிகாரமுறைமையுமிதனால்விளங்கும்

(உ-ஆம்-அதி-அரண்)

இனி (அந்நாட்டிற் குரைப்பா யடங்குமாயினும்) பகைவராற்றெறுவவந்தவிடத்து அதற்கும் அரசனுக்குங் காப்பாதறற் சிறப்புப்பற்றியே வேறோர் அங்கமாகச் சொல்லப்பட்டது — அதிகாரமுறைமையுமிதனால் விளங்கும்

---

## மூன்றாம் அங்கம் கூழ் இயல்

(௩-ஆம்-அதி-பொருட்செயல்வகை)

பெரும்பாலும் நாட்டாலும் அரணாலும் வளர்க்கவுங் காக்கவும் படுவதாகிய பொருள்சம்பாதித்தலின்விதம் (அதிகாரமுறைமையுமிதனால்விளங்கும)

திருக்குறளதிகார [illegible]

## நான்காம் அங்கப் படை இயல்

காரத்திற் சுருக்கச்சொல்லி அவ்வளவிலடங்காமையால் அதனை இருவகைப்படுத்தி இரண்டதிகாரத்தாலே சொல்லத்தொடங்கி முன்னே நட்புச்சொல்லுகின்றார்.

௫- ஆம்- அதி- கூடாநட்பு

பகைமைபால உள்ளேகூடாதிருந்தே சமையங்கிடைக்குமளவும் புறத்திலேகூடி நடப்பவர்நட்பு.

௬- ஆம்- அதி- பேதைமை

யாதொன்றும அறியாமை. [இனி அந்நட்பை எதிர்மறுத்த அப்பகைமுகத்தாலே சொல்லத்தொடங்கினார் அப்பகைதான் முழுவதும் விடலாகாதகுற்றமாகிய குரோதத்தாலும் காமத்தாலும்வருவதாம். அவைகளுள் குரோதத்தால்வருபவைஐந்ததிகாரத்தாலும், காமத்தால்வருபவைஐந்ததிகாரத்தாலும், சொல்லுவதற்கு அவ்விரணடுக்கும் அடியாகிய மயக்கத்தை - பேதைமை - புல்லறிவாண்மை - என இருவகைப்படுத்தி, இரண்டதிகாரத்தாலே சொலலத்தொடங்கி முதலிலே - பேதைமை சொல்லுகின்றார்.]

ஆம்- அதி- புல்லறிவாண்மை.

புல்லிய அறிவை ஆளுதற்றன்மை அஃதாவது தான்சிற்றறிவினனாயிருந்தே தன்னைப் பேரறிவனாகமதித்து உயர்ந்தோராற்சொல்லப்படும் உறுதிச்சொல்லை கொள்ளாமை.

௮- ஆம்- அதி- இகல்.

இருவர்தமமுள்ளே போர்செய்து வலிமை தொலைத்தற்கேதுவாகியமாறுபாடு பேதைமைபுல்லறிவாண்மைகளால் வருங்குரோதகாமங்களுள் அரசர்க்குக்குரோதம் அதிகமாயுள்ளதாகலால் அதனால் வருமவைதனைச் சொல்லத்தொடங்கி முதலிலே இகல சொல்லுகின்றார்.

௯- ஆம்- அதி- பகைமாட்சி

அறிவில்லாமை முதலாகிய குற்றங்களுடைமையாக பகைமையை மாட்சிமைப் படுத்தல், அரசர்க்கெவ்வழியானும் பகையில்லாமை கூடாமையால் மேலேபொதுவகையால் விலக்கப்பட்ட இகலை, இவ்விடத்தே சிறப்புவகையால் விதிக்கின்றாராதலால் இது அதன்பின்வைக்கப்பட்டது.

௰-ஆம்-அதி பகைத்திறந்தெரிதல்.

மாட்சிமைப்படாதபகையை, ஆகுதற்குற்றமும், முன் ஆய்நின்றபகையுள் நட்பாகுந் தன்மையதாம அவலாக்குற்ற



ன்மைபதும், அவைகளிலே செய்வதும்,மற்றைகளையுத்தன்மையதும், அதனிடத்திலேசெய்வனவும், களையும் பருவமும், களையாமற்போனால் படுமிழுக்கமும், என்று இவைகளை, ஆராய்தல் இவையெல்லாம் மாட்சிமைப் படாத பகையினவாகலால் இது பகைமாட்சியின் பின்வைக்கப்பட்டது.

௰௧- ஆம்-அதி- உட்பகை

புறப்பகைக்கிடமாக்கி கொடுத்து அதுவெல்லுமளவும் உள்ளாய் நிற்கும்பகை. இதுவுங்களையப்படுவதிலே சேர்ந்ததாகலால் அதன்பின் வைக்கப்பட்டது

௰௨- ஆம்- அதி- பெரியாரைப்பிழையாமை.

பெரியாரை அவமதித்து நடவாமை இது குரோததால் வருமவைகளின் முடிவில்வைக்கப்பட்டது

௰௩- ஆம்- அதி- பெண்வழிச்சேறல்.

தன்வழி நடத்தற்குரியவளாகிய மனையவள் வழியேதான் நடத்தல் இனி காமத்தால் வருபவைநேரேபகையபலவாயினும் பெருககஞ்சிறைத்தல் அழிவைத்தருதல் என்னின்றதொழில்களாலேபகையோடொத்தலால் அவைகளைப் பகைப்பகுதியி

ன் முடிவிலே சொல்லத்தொடங்கி முதலிலேபெண்வழிச்சேற
ல் சொல்லுகின்றார.

௯௪ ஆம் அதி- வரைவின்மகளிர்.

தந்நலம் விலைகொடுப்பார்யாவர்க்கும் விற்பதலலது அக
ற்குஅவார்ஆகாதார் என்கின்றவரைவு இலலாதமகளிர் அது இய
ல்புஆகலால் இது தமக்குரியமகளிரால வருங்குற்றத்தின் பின்
வைக்கப்பட்டது.

௯௫ ஆம் அதி- கள்ளுண்ணாமை

ஒழுக்கமும் உணர்வுமழித்தலில் பாதகையரோடொப் ப
தாகியகள்ளினையுண்ணமை அதுசிறப்பு எதிர்மறைமுகத்தா
லே சொல்லுகிறார்.

௯௬ ஆம் அதி- சூது

அறம்பொரு ளின்பங்களுக்குத்தடையாகிய சூதாடல். இ
ச்சூதாடலும் பிணியனுபவித்தலுஞ் சொல்லத்தொடங்கி மு
தலிலே சூதின தியல்பு சொல்லுகின்றார்.

௨௰ திருக்குறளதிகாரஸ்வரூபகுசகம்.

௯௭ ஆம் அதி- மருந்து

பழவினையாலுங் காரணங்களாலு மனிதர்க்குவரும் பிணி
களுள்பழவினையால்வருவன அவ்வினை கழியுமபோதலலாற்றீ
ராமையாலவையொழித்து மற்றைக்காரணங்களால் வருமவவ
றீர்க்குமருந்தின் திறம. காரணங்களாவன உணவுதொழில்களி
னது ஒவ்வாமை

ஆறும்அங்கம் குடிஇயல்

இதுவே "ஒழிபியல" எனப்பட்டது. (அரசியல்முதல்-மற்
றைத் தங்கவியல்களிலுமடங்காதொழிந்தவையாவும-இதனுள
விரித்தலால்) இது ஒழிபியல் எனப்பெயராயிற்று

முதல்- ஆம்- அதிகாரம்- குடிமை

உயர்ந்தகுடியினிடத்துப் பிறந்தவரதுதன்மை உயர்குடிப்பிறப்பு நாலவகைவருணததார்க்கும் அவசியம வேணடியதாகலால அச்சிறப்புப்பற்றி முனவைககபபடடது

உ- ஆம- அதி- மானம

எந்நாளுந் தன்னிலையிலேதாழாமையும ஊழால் தாழ்வுவந்தவிடத்து உயிர்வாழாமையுமாம ( இது அக்குடிப்பிறப்பை அழியாமல நிறுத்துதலாலே அச்சிறப்புப்பற்றி அதனபினவைக்கப்பட்டது)

ஙு ஆம்-அதி-பெருமை

செய்தற்கரியசெய்தல் செருக்கிலலாமை பிறர்குற்றஞ்சொல்லாமை எனறிவைமுதலிய நற்குணஙகளாலே பெரியராயிருத்தன்மையாம (நிலையிலிருந்துமேலுமேலு முயாந்துவதாகிய விகதணஙகளுண்டாவது நிலையிலிருந்து தாழாமையுள்ளவிடத்தேயாகலால் இது மானத்தின் பின்வைககப்படடது )

சு- ஆம்- அதி- சான்றாண்மை

பலகுணங்களாலுநிறைந்து அவைகளை ஆளுகைற்றன்மை பெருமையு ளடங்காத பலகுணங்களையுத் தொகுத்துககொணடு நிற்கையால் இது அதனபின்வைககப்பட்டது.

ரு ஆம்- அதி- பணபுடைமை

பெருமைசான்றாண்மைகளில் தாமவழுவாதுநின்றெ எல்லாரியலபுகளுமறிந்துநடத்தலுடையராதல் அதிகாரமுறைமையு மிதனாலவிளங்கும-



க-ஆம்-அதி-நன்றியிற்செல்வம்

சம்பாதித்தவனுக்கும் பிறர்க்கும் - பயன்படுதலில்லாத செல்வத்தினியல்பு - செல்வமுடையானது குற்றஞ் செல்வத் தின்மே லேற்றப்பட்டது.

எ-ஆம்-அதி-நாணுடைமை.

முன்சொல்லப்பட்ட சார்பு - பண்புமுதலிய குணங்களா லுயர்ந்தோர் - தமக்குத் தகாதகருமங்களில் - நாணுதலுடையராற்றன்மை - அதிகாரமுறைமையும் இதனுல்விளங்கும்

அ-ஆம்-அதி-குடிசெயல் வகை

ஒருவன் தான்பிறந்த குடியை உயரச்செய்தலின் விதம் இது தாழ்வின்றி தனது நாணுடையவர்க் குண்டாகுவதாகலின் அதன்பின் வைக்கப்பட்டது

க-ஆம்-அதி-உழவு

சிறுபான்மை - வாணிகர்க்கும், பெரும்பான்மை - வேளாளர்க்கும், உரித்தாகிய உழுதற் றொழில் — இதுசெய்விக்கும் போது மற்றவர்க்கு முரித்தாகும் இது-முன்னே குடி உயர்தற்கேதுவென்ற முயற்சியாகலால், குடிசெயல்வகையின்பின் வைக்கப்பட்டது

ல-ஆம்-அதி-நல்குரவு.

அனுபவிக்கப்படுவனவாயவை - இல்லாமை அதிகாரமுறைமையும் இதனுல் விளங்கும்

[illegible]-இரவு.

மானங்கெடாத [illegible] மானங்கெடாத விரத்த விரவாமைபோடொத்தலைவ், [illegible] விடுபெறுவ தற் குதவிசெய்யாரிய [illegible] ஏக்கோமென்கிற அற நூல்வழக்குட்பட்டு [illegible] இறத்தலை விலக்குதற்பொருட்டு [illegible] அதிகாரமுறைமையும் இதனுல் விளங்கும்.

௱௭-ஆம்-அதி-இரவச்சம்

மானங்கெடவரு மிரத்தலுக்கு அஞ்சுதல். அதிகாரமுறைமையும் இதனால் விளங்கும்.

௨௨. திருக்குறளதிகாரவகுப்புச்சுகம்.

௱௮-ஆம்-அதி-கயமை.

கீழோரது தன்மை *(முன்னே) அரசியலுள்ளும், மற்றை அங்கவியலுள்ளும், சிறப்புவகையாற் சொல்லப்பட்ட குணங்களுள் ஏற்புடையவைகளை குறிப்பினல் யாவர்க்கும் பொருத்த வைத்தமையால் அங்கே குறிப்பாற் சொல்லியவையும், இங்கே ஒழிபியலுள் வெளிப்படச்சொல்லியவையும், ஆகிய குணங்களுள் யாதுமிலாகிய கீழோரது தன்மையாதலால், இது எல்லாவற்றிற்கும்பின் வைக்கப்பட்டது.

ஆக-அதிகாரம்-௱௮



பொருட்பால்

முற்றிற்று





சிவமயம்

நாயனாருளியது.

மூன்றாவது

# காமத்துப்பால்.



திருவள்ளுவமாலையுள் - மோசிகீரனாரருளிய
காமத்துப்பால - அதிகாரத்தொகை
வெண்பா

ஆண்பாலே மூவிரண்டு பெண்பாலடுத்தன்பு *
பூண்பா லிருபாலோ ராறாக - மாண்பாய *
காமத்தின் பக்கமொரு மூன்றாகக் கட்டுரைத்தார் *
நாமத்தின் வள்ளுவனார் நன்கு *



இனி - அப்பொருளைத் துணைக்காரணமாக வுடைத்தாய் இம்மையே பயப்பதாகிய - இன்பத்தைச் சொல்லும் படி எடுத்துக்கொண்டார்

இவ்விடத்து "காமம்" என்றது. (ஒருகாலத்தில் ஒருபொருளால் கண்டுகேட் டுயிர்த்துற் றறிவதென்னும் ஐம்புலன்களையும், அநுபவித்தற் கிறப்புடைத்தாகிய இன்பத்தினை

இது-புணர்ச்சி-பிரிவு-என இருவகைப்படும் மறறை இருத்தல்-இரங்கல்-ஊடல்-என்பன [illegible] இவர் பொருட்பாகுபாட்டினை அறம்-பொருள்-இன்பம்-என வடநூல்வழககுப் பற்றிச் சொல்லுதலால் - அப்படியே அவைகளைப் பிரிவினிடத்து அடக்கினர்.

இனி-அவைகளுடே [illegible] பொருந்த புணர்ச்சியைக் (களவு) என்றும், பிரிவைக் (கற்பு) என்றும், பெரும்பான்மைபற்றி வகுத்து அவைகளைச் சுவைமிகுதி யுண்டாக உலகநடையோடு ஒத்ததும், ஒவ்வாமையு முடையனவாகச் சொல்லுகின்றார்—அதனைகோள் இரண்டினுள்ளும் * களவாவது (பிணி-மூப்பு-இறப்புகளில்லாமல எத்தாளு மொருதன்

மையராய் உருவும் - திருவும் - பருவமும்-குலமும்-குணமும்-அன்பும் - முதலானவைகளாலே தம்முள் ஒப்புமையுடையரா கிய) தலைவனும், தலைவியும், பிறர் கொடுப்பவும், அடுப்பவும், இல்லாமல் ஊழ்வகையால் தாமே எதிர்ப்பட்டுப் புணர்ந்து வருவது * அதனைஎழுதிகாரத்தாலே சொல்லத்தொடங்கி முத லில் தகையணங்குறுத்தல் சொல்லுகின்றார்.

## களவியல்.

### ஆண்பால்

முதல்-ஆம்-அதி-தகையணங்குறுதல்

(பொழிலவிளையாட்டு விருப்பால் மகளிர்கூட்டம் நீங்க-அதனிடமுறுத் தனித்து நின்றவளை வேட்டைவிருப்பால் இளை யவர் நீங்க தனித்துவந்து கண்ட தலைவன்) அவள் அழகு தன கரு வருத்தமுஉ டாககுதலைச் சொல்லுதல்— இது - கண்ட பொழுதே தோன்றுவதாகலால் முதலிலேசொல்லப்பட்டது

உ-ஆம்-அதி- குறிப்பறிதல்

தலைவன் தலைவிகுறிப்பை யறிதலும் - தோழிகுறிப்பை யறி தலும் - அததோழி அவ்விருவர்குறிப்பை யறிதலும் - தலைவி யழகைக்கண்டு வருந்திய தலைவன் தலைவியைக கூடும்போது இதுவேணடுமாதலால் தகையணங்குறுத்தலின்பின் வைககப் பட்டது

ங-ஆம்-அதி-புணர்ச்சிமகிழ்தல.

அப்படிக குறிப்பறிந்து புணர்ந்ததலைவன் அப்புணர்ச்சி யை மகிழ்ந்துசொல்லுதல் அதிகாரமுறைமையு மிதனால்

விளங்கும்

ச-ஆம்-அதி-நலம்புனைந்துரைத்தல்

தலைவன் - தலைவிநலத்தினை வருணித்துச் சொல்லியது — இது - புணர்ச்சியின் மகிழ்ந்தவிடத்து நிகழ்வதாகலால் அதன் பின்வைக்கப்பட்டது

ரு-ஆம்-அதி-காதற்சிறப்புரைத்தல்

தலைவன் தன் ஆசைமிகுதியைச் சொல்லலும் - தலைவி தன் ஆசைமிகுதியைச் சொல்லலுமாம் — இது-புணர்ச்சியும் - நல



னும் பற்றி நிகழ்கின்றதாகலால், அவற்றினதிகாரங்களின்பின் வைககப்பட்டது

சு-ஆம்-அதி-நாணுத்துறவுரைத்தல்

தாரப்பிரிக்கப்பட்டுப் பொறுதலாகிய தலைவனும், அறத் தோடு நிற்பிக்கத்தொடங்கிய தலைவியும், தமது நாணமிழந் தலைச்சொல்லுதல் — இது-காதல் மிகுந்தவிடத்து நிகழ்வதாக லால், காதற்சிறப்புரைத்தலின்பின் வைக்கப்பட்டது

எ-ஆம்-அதி-அலரறிவுறுத்தல்

களவொழுக்கம் வேண்டியதலைவன் - பிறர்சொல்லுகின்ற அலர் தனக்கு ஆகின்ற விதத்தைத் தோழிக்கு அறிவித்தலும், மணமாக உடன்போக்காக ஒன்றுவேண்டிய தலைவியுந், தோ ழியும், அவ்வலரை அவனுக்கு அறிவுறுத்தலுமாம்

———◆◇◆———

இனிக்-கற்பியல்பதினெட்டு அதிகாரத்தாலே சொல்லத் தொ டங்கி, அவற்றுள் இருகூறாய்ப் பிரிவாற்றாமை முதல் அவர்வயின்விதும்பல் வரைக்கும், (யஉ) அதிகாரம்

பெண்பாலாகவும், குறிப்பறிவுறுத்தல் முதல
ஊடலுவகைவரைக்கும், (௬) அதிகாரம்
(ஆண்பாலும்பெண்பாலுமாகிய)
இருபாலாகவும், வகுத்துச்
சொல்லுகின்றார்

(இறையனாரகப்பொருள்) சூத்திரம்.

கற்பினுட்பிரிவே கடிவரையின்றே *
ஓதல்காவல் பகைதணிவினையே *
வேந்தர்க்குற்றுழிப் பொருட்பிணி பரத்தையென்
றாங்கவ்வாறே யவ்வயிற்பிரிவே. *

(தொல்காப்பியம்) சூத்திரம்.

கற்பெனப்படுவது கரணமொடுபுணரக் *
கொளற்குரிமரபிற் கிழவன்கிழத்தியைக் *
கொடைக்குரிமரபினோர் கொடுப்பக்கொள்வதுவே.

(அகப்பொருள்விளக்கம்) சூத்திரம்.

பொற்பமைசிறப்பிற் கற்பெனப்படுவது *
மகிழ்வுமூடலு மூடலுணர்த்தலும் *
பிரிவும்பிறவு மருவியதாகும் *



# கற்பியல்.
## பெண்பால்.



முதலாம்- அதி- பிரிவாற்றாமை.

(மணஞ்செய்துகொண்டபின் தலைவன் அறம்- பொருள்- இன்பங்களின்பொருட்டுத் தலைவியைப்பிரிந்து தூரத்திலும், அவளிடத்திலுஞ் செல்லுநாளில்) அப்பிரிவை அவள் பொறுக்கமாட்டாதவளாந்தன்மை. அது - இங்கே பிரிவை அறிவித்த தலைவனுக்குத் தோழிசொல்லலும், தோழிக்குத் தலைவி அவன் குறிப்பால் அறிந்துசொல்லலும், பிரிவை அறிவித்தவிடத்துச் சொல்லலும், பிரிந்தவிடத்து ஆற்றவிக்குமிடத்துத் தோழிக்குச்சொல்லலும், எனும் நால்வகையாலே சொல்லப்படும்.

௨-ஆம்-அதி-படர்மெலிந்திரங்கல்

பிரிவுபொறுக்க மாட்டாதவளாகிய தலைவி தான் உறுகின்ற துன்பத்தை எப்போதும் நினைத்தலின் அந்நினைவால் மெலிந்து இரங்கலாம். அதிகாரமுறைமையு மிதனால் விளங்கும்

௩-ஆம்-அதி-கண்விதுப்பழிதல்

கண்கள் தலைவனைக்காணுதற்கு விரைதலாலே வருந்துதல் இது-படராலே மெலிந்தவிடத்து நிகழ்வதாகலால்,அதன்பின் வைக்கப்பட்டது

௪-ஆம்-அதி-பசப்புறுபருவரல்.

(பசப்புறுதலாலாகிய வருத்தம்) பசப்பாவது பிரிவு பொறாமையால் வருவதோர் நிறவேறுபாடு இது-தலைவனைக்காணப்பெறாதவிடத்து நிகழ்வதாகலால் கண்விதுப்பழிதலின்பின் வைக்கப்பட்டது

௫-ஆம்-அதி-தனிப்படர் மிகுதி

(தனியாகிய துன்பமிகுதி) அது - பசப்புற்று வருந்தியவளுக்கு உரியதாகலால் பசப்புறுபருவரலின்பின் வைக்கப்பட்டது.

## ௬-ஆம்-அதி-நினைந்தவர்புலம்பல்

முன்கூடியகாலத்தி னின்பத்தை நினைந்து பாசறையிடத்து த் தலைவன் தனிமையடைதலும், தலைவி தனிமையடைதலு மாம்—இது - படர்மிகுதி தம்மிடத்ததாக நினைந்த தலைவிக்



கும் உரித்தாதலால், இச்சம்பந்தம் பற்றித் தனிப்படர் மிகுதி யின்பின் வைக்கப்பட்டது.

## ௭-ஆம்-அதி-கனவுநிலையுரைத்தல்

தலைவி - தான்கண்ட கனவினது நிலைமையைத் தோழிக்குச் சொல்லியது —அக்கனவு தனவினிடத்து நினைவுமிகுதியாலே கண்டதாதலால், இது-நினைந்தவர் புலம்பலின்பின் வைக்கப் பட்டது.

## ௮-ஆம்-அதி-பொழுதுகண்டிரங்கல்

மாலைப்பொழுது வந்தவிடத்து - அதனைக்கண்டு தலைவி இரங்குதல் கனவு முந்துறுதலினை யில்லையெம்பதுபற்றி - பகற் பொழுது பொறுத்திருந்த தலைவிக்கு உரியதாதலால், இது-கனவுநிலை யுரைத்தலின்பின் வைக்கப்பட்டது

## ௯-ஆம்-அதி-உறுப்புநலனழிதல்

தலைவியினுடைய கண்ணும்-தோளும் - நெற்றியும்-முதலாகிய அவயவங்கள் தம் அழகு அழிதல் இது - இரக்கமிகுந்தவிடத்துநிகழ்வதாகலால், பொழுதுகண்டிரங்கலின்பின் வைக் கப்பட்டது

## ௰-ஆம்-அதி-நெஞ்சொடுகிளத்தல்.

பிரிவுபொறுமை மேற்படத் தனக்கோர் பற்றுக்கோடு காணாத தலைவி தன்னெஞ்சொடு செய்திறன் அறியாது சொல்லுதல் —இது - உறுப்புகள் தமது நலனழிந்தவழி நிகழ்வதாக

லால், அதன்பின் வைக்கப்பட்டது.

௯௧-ஆம்-அதி-நிறையழிதல்.

தலைவி மனதிலே அடக்கப்படு மவைகளை ஆசைமிகுதியால் அடக்கமாட்டாமல் வாய்விடுதல் அது — அதற்குக்காரணம் நெஞ்சொடு சொல்லுதலால், அதன்பின் வைக்கப்பட்டது.

௯௨-ஆம்-அதி-அவர்வயின்விதும்பல்.

தூரதேசப்பிரிவிலே தலைவனுந் - தலைவியும் - ஆசைமிகுதி யால ஒருவரையொருவர் காணுதற்கு விரைதல் இதனுள் தலைவிசொல் நிறையழிவா லுண்டாதலால், அச்சம்பந்தப்பற்றி அதன்பின் வைக்கப்பட்டது



திருக்குறளுரைசொல்லகராதியும்.

(ஆண்பாலும்-பெண்பாலுமாகிய).

# இருபால்.

முதலாம்-அதி-குறிப்பறிவுறுத்தல்

தலைவன்-தலைவி-தோழி யென்றிவர்கள் ஒருவர்குறிப்பையொருவர்க் கறிவுறுத்தல்—இது பிரிந்துபோகிய தலைவன் வந்து கூடியவிடத்தே நிகழ்வதாகலால், அவர்வயின் விதும்பலின் பின் வைககப்பட்டது

உ-ஆம்-அதி-புணர்ச்சிவிதும்பல்

தலைவனுந் தலைவியும் புணர்ச்சிக்கண்ணேவிரைதல் மேலே புணர்ச்சி மிகுதிபற்றி - தலைவன் பிரிதற்குறிப்பை யறிவுறுத்த தலைவி அவனிடத்தே நிகழாது, ஆசைமிகுதியினலே பின்னுந் தன்னிடத்தே நிகழ்தலால், இது - குறிப்பறி வுறுத்தலின்பின் வைக்கப்பட்டது

௩-ஆம்-அதி-நெஞ்சொடுபுலத்தல்

காரணமுண்டாகியவிடத்தும், பிணங்கநினையாமல் புணர்ச்சியை விரும்புகின்ற நெஞ்சுடனே தலைவி பிணங்கலும், தலைவன் பிணங்குதலுமாம்.— அதிகாரமுறைமையு மிதனுல் விளங்கும்

௪-ஆம்-அதி-புலவி

இருவர்நெஞ்சும் புணர்ச்சிவிரும்பாது பிணங்க நினைத்தவிடத்து ஒருவரோடொருவர் பிணங்கல் அதிகாரமுறைமையு மிதனுல் விளங்கும்

ரு-ஆம்-அதி-புலவிநுணுக்கம்.

தலைவனுந் தலைவியு மொருபடுக்கையிலே கூடியிருந்தவிடத்து அவ்விடத்துப் பிணங்குதற்குக் காரணமில்லாதிருக்கவும், ஆசை அதிகப்படுதலால் நுட்பமாகிய ஒருகாரண மிருக்கிறதாக உட்கொண்டு அதனைஅவன்மேலேற்றி அவள்பிணங்குதல், காரணத்தி னுணுக்கங் காரியத்தின்மே னின்றது அதிகாரமுறைமையு மிதனுல் விளங்கும்

சு-ஆம்-அதி-ஊடலுவகை.

அப்படிப்பட்ட ஊடலால் தமக்குக்கூட லின்பஞ்சிறந்தவிடத்து அச்சிறப்புக்கு ஏதுவாகிய அவ்வூடலைத் தலைவி மகிழ்தலும், தலைவன் மகிழ்தலுமாம்

காமத்துப்பால்-முற்றிற்று.

உ

நாயகர்துணை.

ஔவையார்
அருளிச்செய்த

# ஆத்திசூடி.

## குறளுதாரணத்துடன் மூலமும்-உரையும்.

### கடவுள் வாழ்த்து.

ஆத்திசூடி-யமர்ந்ததேவனை *
யேத்தியேத்தித்-தொழுவோமியாமே *

(இதன்பொருள்.)

ஆத்திசூடி - ஆத்திமாலையைச் சூடிய பரமசிவன், அமர்ந்த - விரும்பிய, தேவனை - மூத்தமகனாகிய விநாயகனை, ஏத்தியேத்தி, துதிசெய்து துதிசெய்து, தொழுவோம்-வணங்குவோம் யாம்-யாங்கள்.

க-அறஞ்செயவிரும்பு.

அறம்-தருமத்தை, செய-செய்தற்கு, விரும்பு-நீ யாசை கொள்ளு.

குறள்-௪-ம் அதி- அறன்வலியுறுத்தல்-௬-ம்-செய்யுள்.

அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது *
பொன்றுங்காற் பொன்றாத் துணை *

நாமிப்போ தினமைப்பருவமுடையேமாகையாலிறக்குங் காலத்திற் செய்வோமென்று நினையாது தருமத்தைச்செய்தா

லதுசரீரமழிந்துபோம்பொழு துயிர்க்கு அழிவில்லாத துணை யா யுடன்செல்லு மென்பதாம்.

உ-ஆறுவதுசினம்.

ஆறுவது- உனக்குள்ளே தணியத்தகுவது, சினம்-கோபமேயாம்.

உ ஆத்திசூடி.

௩௰௧-ம்-அதி வெகுளாமை-௩௰ம்-செய்யுள்.

மறத்தல் வெகுளியை யார்மாட்டுந் தீய ..... *
பிறத்த லதனான் வரும். ........ *

தன்னினுயர்ந்தோரு மொத்தோரு மிழிந்தோருமாகிய-மூ
ந்திறத்தாருள் யாரொருவரிடத்துக்கோபஞ்செய்தாலும் அது
தியநினைவுகளெல்லா முண்டாக்கித் தன்னைக்கெடுக்கு மாத
லால் ஒருவரிடத்துங்கோபஞ்செய்யலாகா தென்பதாம்.

கூ-இயல்வதுகரவேல்.

இயல்வது-கொடுப்பதற்கிசைவதை, கரவேல்-இரப்பவர்
கரு ஒளியாதே

உமரு-ம்-அதி-ஈகை-கூ-ம்-செய்யுள்.

இலனென்னு மெவ்வ முரையாமை யீதல் . *
குலனுடையான் கண்ணே யுள . *

யான் வறியனென்றிரப்பவன் சொல்லுகின்ற சொல்லைத்தா
ன் பிறரிடத்துச்சொல்லாமையும், அதனைத்தன்னிடத்துச்சொ
ன்னாக கில்லையென்னுது கொடுத்தலும், ஆகியவிரணடும் நல்
லகுடியிற பிறந்தவனிடத் துண்டெனபதாம்.

ச-ஈவது விலக்கேல்.

ஈவது- ஒருவருககு ஒருவர்கொடுப்பதை, விலக்கேல்- வி
லககாதே

யஎ-ம-அதி-அழுக்காறுமை-கூ-ம்-செய்யுள்

கொடுப்ப தழுக்கறுப் பான்சுற்ற முடுப்பதூஉ *
முணபதூஉ மின்றிக கெடும .. . *

பிறாபேற்றின்பொறாமை தன்பேற்றையேயன்றித் தன்சுற்
றத்தின் பேற்றையு மிழப்பிக்கு மென்பதாம்

ரு-உடையது விளம்பேல்

உடையது-உனகருள்ள ஆஸ்தியை, விளம்பேல்-பிறரறிய
சொல்லாதே

அஎரு-ம்-அதி-புல்லறிவாண்மை-ச-ம்- செய்யுள்.

வெண்மை யெனப்படுவ தியாதெனி னொண்மை *
யுடையம்யா மென்னுஞ் செருக்கு. *

உலகத்தாரிகழ்ந்த லறிந்திருந்தும் யாம் நல்லறிவினை யுடைய அத்திருடி.

மென்று தம்மைத்தாமே மதிக்கின்ற மயக்கமே புல்லறிவாண் மை யென்பதாம்

கூ-ஊக்கமது கைவிடேல்.

ஊக்கமது-செய்தொழிலில்- மனஞ்சோராமையை, கை விடேல்-கைவிடாதே

கூ௰-ம்-அதி-ஊக்கமுடைமை-௪-ம்-செய்யுள்

ஆக்க மதர்வினாய்ச் செல்லு மசைவிலா *
வூக்க முடையா னுழை *

உள்ளக்கிளர்ச்சியை யுடையவனிடத்துச் செல்வந் தானேவ ழிகேட்டுக்கொண்டுவந்து சேரு மென்பதாம.

எ-எண்ணெழுத்திகழேல்

எண்-கணித நூலையும், எழுத்து - இலக்கண நூலையும், இக ழேல்-இகழாமற் கற்றுக்கொள்ளு.

௪௰-ம்-அதி-கல்வி-உ-ம்-செய்யுள்

எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்
கண்ணென்ப வாழு முயிர்க்கு *

அறநூன்முதலியவைகளை யறிதற்குக் கணிதநூலு மிலக்கண நூலுங் கருவியாகுமென்பதாம்

அ-ஏற்பதிகழ்ச்சி

ஏற்பது-ஒருவரிடத்திற்போய் இரப்பது,இகழ்ச்சி-உனக் குப் பழிப்பாகும்

௱௬-ம்-அதி-இரவச்சம்-முதலாஞ்-செய்யுள்.

கரவாது வந்தீயுங் கண்ணன்னூர் கண்ணு . *
இரவாமை கோடி யுறும் . *

தமக்குள்ளதை யொளிக்காமற் கொடுப்பவரிடத்தும் - இரந்து செல்வமடைதலின் இரவாமையே மிக நன்றாகுமென்பதாம்

௯- ஐயமிட் டுண்

ஐயம்-பிச்சையை,இட்டு-இரப்பவர்க்குகொடுத்து,உண்டீயுமுண்ணு.

உ௯௬-ம்-அதி-ஈகை-எ-ம்- செய்யுள்

பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னுந் . *
தீப்பிணி தீண்ட லரிது . *

ஆத்திசூடி

தன்கையி லகப்பட்டதை யாசகர்க்குதவித் தானு முண்பவன் தனக்குத்தானே வயித்தியனாகலால் பசிநோயவனைச்சேரா தென்பதாம்

௰-ஒப்புரவொழுகு

ஒப்புரவு-உலகநடையையறிந்து,ஒழுகு-அந்தவழியேநட.

உ௰உ-ம் அதி-ஒப்புரவறிதல்-௬-ம்-செய்யுள்,

புத்தே ளுலகத்து மீண்டும் பெறலரிதே . *
யொப்புரவி னல்ல பிற . *

ஒப்புரவைப்போல நல்லசெயல்கள் விண்ணுலகத்து மண்ணுலகத்து மில்லையென்பதாம்

௰க-ஓதுவதொழியேல்,

ஓதுவது-நூல்களைவாசிப்பதில், ஒழியேல்- எப்போதும் நீங்காதே,

௪௰-ம்-அதி-கல்வி எ-ம்-செய்யுள்

யாதானு நாடாமா லூராமா லென்னொருவன் *
சாந்துணையுங்கல்லாத வாறு *

பிறர்நாடுகளுமூர்களுந் தன்னூடுந் தன்னூரும்போல உபச
ரிக்குமாதலால் ஒருவன் கல்வியைக்கற்கவேண்டு மென்பதாம்,

௩௨-ஔவியம்பேசேல்.

ஔவியம் - பொறாமையாகிய சொல்லை, பேசேல் - எப்
போதும் பேசாதே

௩௭-ம்-அதி-அழுக்காறுமை-௯-ம்-செய்யுள்

அறனாக்கம் வேண்டாதா னென்பான் பிறனாக்கம் *
பேணா தழுக்கறுப் பான் . . *

பிறர்செல்வங்கண்டு பொறாமைகொள்பவன் அறத்தையும்
புகழையு மிழப்பனென்பதாம்.

௩௩-அஃகஞ்சுருக்கேல்.

அஃகம்-தானியவிலையை, சுருக்கேல்- அதிகலாபத்துக்கா
க குறையாதே

௨௧-ம்-அதி-தீவினையச்சம்-௨-ம்-செய்யுள்

தீயவை தீய பயத்தலாற் றீயவை . . . *
தீயினு மஞ்சப் படும் . . . . *

ஒருவன்தனக் கிதத்தைக்குறித்துச் செய்யுந்தீவினை பின்கெ
டுதிருடி

ன்று அறுத்துவதிலே அப்படிபின்சென்று வருத்துதலில்லா
த நெருப்பினுங் கொடியதென்று அதற்கஞ்சவேண்டு மென்
பதாம்.

௩௪-கண்டொன்றுசொல்லேல்

கண்டு-ஒன்றைப்பார்த்து, ஒன்று-மற்றொன்றை, சொல்
லேல்-சாட்சியாகும்போது சொல்லாதே

௩௰-ம்-அதி-வாய்மை ௯-ம்-செய்யுள்.

தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின் *
தன்னெஞ்சே தன்னைச் சுடும் *

தன்னெஞ் சறிவதொன்றைப் பிறரறிந்திலரென் றொருவன் மறைப்பானாயின் அது மறையாதறிந்து பின்வருத்து மென்பதாம்.

௯௫-ஙப்போல்வளை.

ஙப்போல்-ஙகரந் தான் பிரயோசன முள்ளதாகவிருந்து தன்வருக்கத்தைத் தழுவுதல்போல,வளை-நீ பிரயோசனமுள்ள வனாக விருந்து உன்னினத்தைத் தழுவு

௫௩-ம்-அதி-சுற்றந்தழால்-௭-ம்செய்யுள்

காக்கை கரவா கரைந்துண்ணு மாக்கமு *
மன்ன நீ ரார்க்கேயுள *

காககையைப்போ லழைத்து இனத்துட னுண்பவர்க்குச் செல்வம் பெருகு மென்பதாம்

௯௬-சனிநீராடு.

சனி-சனிக்கிழமைதோறும், நீர்-வெந்நீரில், ஆடு-நீயெண்ணை யிட்டுக்கொண்டு தலைமுழுகு.
(ஆயுளும் வன்மையு மமைக்குமாதலால் சதிப்பயனுக்குரிய காலமாகக் கூறியது)

௫௰-ம்-அதி-காலமறிதல்-௩-ம்-செய்யுள்.

அருவினை யென்ப வுளவோ கருவியாற் *
கால மறிந்து செயின் *

அருவினையென்பு- செய்தற்கரிய தொழில்களென்று சொல்லப்படு மவை, உளவோ-உண்டோ, கருவியால்- அவைகளை முடித்தற்காகுஞ் சாதநங்களுடனே, காலம்-காலத்தை, அறிந்து-தெரிந்து, செயின்-செய்தால், என்பதாம்.

௯௩-நயம்படவுரை.

நயம்பட - பேசுஞ்சொல்லிலே நயமுண்டாக, உரை - ஒருவருடன் பேசு

௰-ம்-அதி-இனியவைகூறல்-௬-ம்-செய்யுள்.

அல்லவை தேய வறம்பெருகு நல்லவை . . . *
நாடி யினிய சொலின் . . . . . *

ஒருவ னன்மையைத்தரு மின்சொற்களை யாராய்ந் தெடுத் துப் பேசுவானாயின் அவனிடத்துப் பாவங் குறையத் தருமமேலிட்டு வளருமென்பதாம்

௯௪-இடம்படவீடிடேல்.

இடம்பட-விசாலமுண்டாக, வீடு-வீட்டை, இடேல்- கட்டாதே

௪௰௭-ம்-அதி-தெரிந்துசெயல்வகை-முதலாய்ச்செய்யுள்

அழிவதூஉ மாவதூஉ மாகிவழிபயக்கு . . . *
மூதியஞ் சூழ்ந்து செயல் . . *

ஒருகருமத்தைச்செய்யும்போது செலவும் வரவு மிலாபமு மாராய்ந்து பயனுண்டெனிற் செய்யக்கடவ னென்பதாம்

௯௫-இணக்கமறிந்திணங்கு

இணக்கம்-நற்குணத்தை, அறிந்து-இருக்கப்பார்த்து, இணங்கு-ஒருவரோடுசினேகஞ்செய்.

௮௰-ம்-அதி-நட்பாராய்தல்-௩-ம்-செய்யுள்

குணனுங் குடிமையுங் குற்றமுங் குன்றா *
வினனு மறிந்தியாக்க நட்பு . . . . *

ஞானமுதலாகிய நால்குமுடையவரோடு நட்புசெய்கவென்பதாம்

உ௰-தந்தைதாய்ப்பேண்

தந்தை தகப்பனையும், தாய் - தாயையும், பேண் - காப்பாற்று

கல்-ம்-அதி-பெரியாரைப்பிழையாமை-உ-ம்- செய்யுள்

பெரியாரைப் பேணாதொழுகிற பெரியாரால் *
பேரா விடும்பை தரும் *

எல்லாம்வல்லபெரியோரை யவமதித்து நடத்தல் ஒருவனுக்கு நீங்காத துன்பங்களைத் தருமென்பதாம்.



உ௰க நன்றிமறவேல்

நன்றி-ஒருவர்செய்தவுபகாரத்தை, மறவேல்-எப்போதும் மறவாதே

௰க-அதி-செய்ந்நன்றியறிதல்-அ-ம்-செய்யுள்.

நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல *
தன்றே மறப்பது நன்று. *

ஒருவன்றானே முன்பொரு நன்றிசெய்து பின்புதீமைசெய்வானாயின் அவன் செய்தவவ்விரண்டினுள்ளுந் தீமையைப் பொழுதே மறந்து நன்றியை யெப்பொழுது மறவாமற்கொள்வதே தருமமாகுமென்பதாம்

உ௰உ-பருவத்தே பயிர்செய்

பருவத்தே-அது அது விளையுங்காலத்திலே, பயிர்செய்-பயிரிடு.

௪௰க-ம்-அதி-காலமறிதல்-உ-ம்-செய்யுள்

பருவத்தோ டொட்ட வொழுக திருவினைத் *
தீராமை யார்க்குங் கயிறு *

காலம்பார்த்துப்போர்க்குச்செல்லுகின்ற வரசனெக்காலத்துஞ் செல்வத்துடனேவாழ்வனெனபதாம்

உம்ரு-மண்பறித்துண்ணேல்.

மண்-பிறர்வினைநிலத்தை,பறித்து-அபகரித்துக்கொண்டு உண்ணேல்- சீவனஞ்செய்யாதே

மஅ-ம்-அதி-வெஃகாமை-முதலாம்-செய்யுள்

நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக் *
குற்றமு மாங்கே தரும் *

பிறர்க்குரியபொருளை யபகரிப்பதுநமகுத் தருமமல்லவெ
ன்று நினைக்குநமவு நிலையின்றியவாது நலல பொருளை யொரு

வன் விரும்புவானாயி னவ்விருப்பமான தவன்குடியைக கெட
ச்செய்து குற்றத்தையு மப்பொழுதேதரு மென்பதாம்.

உமச- இயல்பலாதனசெயேல.

இயல்பலாதன-தகாதகாரியங்களை,செயேல்- எப்போது
ம் பண்ணாதே.

சுமசு-ம்-அதி-வினைத்தூய்மை முதலாம்செய்யுள்.

துணைநலமாக்கந் தரூஉம் வினைநலம் . . *
வேண்டிய வெல்லாந் தரும் . . *

•

நல்லதுணையானது பொருளொன்றையே தருதலாலும், நல்லதொழிலானது அறம்பொருளின்பங்களைத் தருதலாலுங் காட்சிப் பொருளாகிய துணையிற் கருத்துப் பொருளாகிய தொழிலே சிறந்ததென்பதாம்.

௨௫-அரவமாட்டேல்

அரவம்-நஞ்சுள்ளபாம்புகளை, ஆட்டேல்- பிடித்து ஆட்டாதே:

அ௧அ-ம்-அதி-பகைத்திறந்தெரிதல் மூ:ாலாம்-செய்யுள்.

பகையென்னும் பண்பி லதனை யொருவ *
னகையேயும் வேண்டற்பாற் றன்று . .. *

பகையை விளையாட்டினிடத்து வேண்டினுங் கோபமே விளைந்துபின் மெய்யாமாகலா லவ்விடத்தும் வேண்டலாகாதென்பதாம்

௨௬-இலவம்பஞ்சிற்றுயில்

இலவம்பஞ்சில்-இலவம்பஞ்சுமெத்தையில், துயில்-நீ நித்திரைசெய்

இது வாதசீதப்பிணிகளணுகாமையைச்செய்தலானும் நன்மையறிவை மிக்க விளைத்தலானும்- துயிலுதற்குரிய தேயமெனக் கூறியது.

௫௰-ஆம்-அதி-இடனறிதல்-ௗ-ம்-செய்யுள்.

ஆற்றாரு மாற்றி யடுப விடனறிந்து *
போற்றார்கட் போற்றிச் செயின் *

ஆற்றாரும்-வலிமையில்லாதவரும், ஆற்றி-வலிமையுடையவராய், அடுப-வெல்வார், இடன்- (அதற்கேற்ற) இடத்தை, அறிந்து-தெரிந்து, போற்றி - தம்மைகாத்துக்கொண்டு, போற்றார்கண்- தம்மைநொய்யச்செய்யும் விரோதியினிடத்து, செயின் த

க்கதொழிலைச் செய்வாராயின் என்பதறுற்சாண்க.

உ௰எ- வஞ்சகம்பேசேல்

வஞ்சகம்-வஞ்சனையாகியசொற்களை, பேசேல்-எப்போதும்பேசாதே

உ௰அ-ம்-அதி-கூடாவொழுக்கம்-முதலாம்செய்யுள்.

வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்க *
ளைஞ்சு மகத்தே நகும் . *

ஆக்கிருடி. ௬

காமமிதன்னுள்ளேதோன்றி வருத்த அதனைப் புறத்திலே காட்டாமன்மறைத்து நடப்பவனது திருட்டு நடத்தையைக்கண்டு உடம்பா யவனோடுகலந்துநிற்கின்றபஞ்சபூதங்களுந் தம்முள்ளே சிரிக்குமென்பதாம்

உ௰அ-அழகலாதனசெயேல்.

அழகலாதன- அழகல்லாதகாரியங்களை, செயேல்- செய்யாதே

௬௰௬-ம்-அதி-வினைத்தூய்மை-௬-ம்-செய்யுள்

இடுக்கட் படினு மிளிவந்த செய்யார் .. *
நடுக்கற்ற காட்சி யவர் . *

அசைவற்ற வறிவுடையவர் துன்பம் வந்த காலத்திலு மிகழ்வைத்தருந் தொழில்களைச் செய்யாரென்பதாம்

உ௰௯- இளமையிற்கல்

இளமையில்-சிறுவயதிலே, கல்-வித்தையைக் கற்றுக்கொள்ளு.

௪௧-ம்-அதி-கல்லாமை-ம்-ம்-செய்யுள்

கல்லா வொருவன் றகைமை தலைப்பெய்து . *
சொல்லாடச் சோர்வு படும் . *

கல்லாதவர் கற்றவர்முன்றொன்று பேசுமளவிற்பெருமை யிழந்து அவமானமடைவ ரென்பதாம்

௯௰-அறனைமறவேல்

அறனை - செய்யததககக தருமதததை, மறவேல் - எந்நாளு மறவாதே

௪-ம்-அதி-அறன்வலியுறுத்தல்-௨-ம்-செய்யுள

அறத்தினூஉங் காக்கமு மில்லை யதனை *
மறத்தலினூஉங் கில்லை கேடு *

ஒருவனுக்குத் தருமஞ்செய்தலைப்பார்ககிலு முயர்வைத் தருவதும், அத்தருமத்தை மயக்கத் தான் மறந்து விடுதலைப் பார்ககிலுங் கேட்டைத்தருவதும் இல்லையென்பதாம்

௯௧-அனந்தலாடேல்

அனந்தல்-நித்திரையை, ஆடேல்-அதிகமாகச்செய்யாதே.

௬௪-ம்-அதி-பொச்சாவாமை-௩-ம்-செய்யுள்

பொச்சாப்பார்க் கில்லை புகழ்மை யதுவுலகத் *
தெப்பானூ லோர்க்குத் துணிவு *





மறதியையுடையவர்க்குக் கீர்த்தியில்லை யென்பது இந்தநூ லார்க்குமாத்திரமல்லாமல் மற்றெந்த நூலார்களு முடன்பா டாம-ஆதலால் மறதியாகாதென்பதாம்

௯௨-கடிவதுமற

கடிவது-ஒருவனைககடிந்துபேசுவதை, மற-மறந்துவிடு.

ம-ம-அதி-இனியவைகூறல்-க-ம்-செய்யுள்

இன்சொலினிதீன்றல் காண்பா னெவன் கொலோ *
வன்சொல் வழங்கு வது *

பிறர்சொல்லிய வின்சொல்லான துதனக் கின்பந் தருதலை யறிந்துதறிகின்றவன் பிறரிடத்துக் கடுஞ்சொல்லைப் பேசுவதென்ன பிரயோசனத்தைக் குறித்தோ வதுதெரிந்திலே மென்பதாம்.

ருரு-காப்பதுவிரதம்

காப்பது உன்றாலே காப்பாற்றத்தகுவது, விரதம்-விரதமேயாம்

உ-எ-ம்-அதி-தவம்-க-ம்-செய்யுள்

உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை*
யறறே தவத்திற் குரு *

உண்டி சுருக்குதன்முதலாகிய விரதங்களால் வருந் துன்பங்களைப் பொறுப்பதும், பிறவுயிர்களுக்கு நோய் செய்யாமையுமாகிய விரண்டுந் தவத்திறகு வடிவமாகு மென்பதாம்.

ருசு-கிழமைப்படவாழ்

கிழமைப்பட - உன்பொருள் பிறருக்கு உரிமைப்பட, வாழ்-நீ வாழு

அ-ம்-அதி-அன்புடைமை-உ-ம்-செய்யுள்

அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையா *
ரென்பு முரியர் பிறர்க்கு *

அன்பில்லாதவ ரெல்லாப்பொருளையுந் தமக்கென வைத் தனுபவிப்பரென்று மன்புடையவர் தம் மெலும்பைக் கேட் பினும் பிறருக்கு உதவுவரென்றுஞ் சொல்லியதாம்.

௬௫-கீழ்மையகற்று.

கீழ்மை-இழிவுகளை, அகற்று-நீக்கு

ஆத்திசூடி ௰௩

௱௭-ம்-அதி-கயமை-௧-ம்-செய்யுள்

மக்களே போல்வர் கயவரவரன்ன .... *
வொப்பாரி யாங்கண்ட தில் *

மனிதர் சாதிகளும் கீழோர்சாதிகளு முருவமுமுது மொத்த லாற் குணங்களாலல்லது அவ்விருசாதிகளுமுள்ள வேற்றுமை யறியப்படா தென்பதாம்

௬௬-குணமது கைவிடேல்.

குணமது-குணமுள்ளதாகிய ஒன்றை, கைவிடேல்-விட்டு விடாதே

௬௭-ம்-அதி-வினைத்திட்பம-௬-ம்- செய்யுள்

துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி *
யின்பம பயக்கும் வினை . *

துவக்கத்திலேமுயற்சியாற்றுன்பம்வரினு மதற்குத்தளராம ன் முடிவிற் சுகத்தைத்தருந்தொழிலை மனவலிமையாறசெய்க வென்பதாம்.

௬௭-கூடிப் பிரியேல்

கூடி-(நல்லாரோடு) சிநேகித்து, பிரியேல்-பின்புஅவரை விட்டு நீங்காதே

௮௰௧-ம்-அதி-பழமை-௫-ம்- செய்யுள்

அழிவந்த செய்யினு மன்பறா ரன்பின் *
வழிவந்த கேண்மை யவர் *

நட்பினாதமக்குககேடுசெய்தாலு மன்பையும பழைய தாகிய நட்பையுமுடையவ ரவர்மேலன்பு நீங்கா ரென்பதாம்.

௫௰௮-கெடுப்பதொழி

கெடுப்பது-பிறருக்குக கேடுசெய்வதை, ஒழி- எக்காலத்திலும் விட்டிரு

௨௰௧-ம்-அதி-தீவினையச்சம-௫-ம்- செய்யுள்

மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழி *
னறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு *

ஒருவன் பிறனுக்குக் கேடு செய்தற் கெண்ணுவானாயி னப்பொழுதே யவனைக் கெடச்செய்து தருமம நீங்குமாதலாலே தீவினையை யெண்ணலாகா தென்பதாம்.

௬௦. ஆத்திசூடி.

௫௰௯- கேள்விமுயல்

கேள்வி - பெரியோர் சொல்லைக் கேட்பதற்கு, முயல்- முயற்சிசெய்

௪௰௨-ம்-அதி-கேள்வி-௫-ம்- செய்யுள்.

கற்றில னாயினுங் கேட்க வஃதொருவற் *
கொற்கத்தி னூற்றாந் துணை *

ஒருவற்குக் கல்வியில்லையாயினும் கேள்விமாத்திர முண்டெ னின் அதுவே தளர்ச்சிவந்த விடத்துத் துணை நீக்குமென்பதாம

சுஅ- கைவினை கரவேல.

கைவினை-உனக்குத்தெரிந்ததொழிலை, கரவேல்- சமையத் தில் ஒளியாதே

௬அ-ம்-அதி- வாய்மை-ச-ம்- செய்யுள்.

உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தா *
ருள்ளத்து ளெல்லா முளன் *

தன்மனதறிற்கேற்பவொருவன் பொய்யாம னடப்பானாயி ன் அவனது தருமத்தி னருமை நோக்கியுயர்ந்தோர்பலருமவ னையே யெப்போது நினைப்பரென்பதாம்.

சுகூ-கொள்ளை விரும்பேல

கொள்ளை- பிறர்பொருளைக் கொள்ளையிட, விரும்பேல் ஆசைப்படாதே

௬கூ-ம்-அதி-கள்ளாமை-உ-ம்-செய்யுள்

உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன் பொருளைக் *
கள்ளத்தாற் கள்வே மெனல் *

ஒருவன் பிறன்பொருளை வஞ்சித்துத் திருடலேயன்றித் தி ருடநினைத்தலும அவனுக்குப் பாவமாகுமென்பதாம்

சுஉ- கோதாட்டொழி

கோது-குற்றம்பொருந்திய, ஆட்டு விளையாட்டை, ஒழி-

நீக்கு.

அ௰௪-ம்-அதி-பேதைமை-உ-ம்- செய்யுள்

பேதைமையு ளெல்லாம் பேதைமைகா தன்மை *

கையல்ல தன்கட் செயல் *

இருமைக்குமாகாவென்றுநூலோர்கடிந்தசெயல்களை விரும்பிச்செய்தலே யிகுந்தபேதைமை யென்பதாம்.



௬௰௩ - சக்கரநெறிநில்

சக்கரநெறி-அரசனுக்கினைவழியில், நில்- நீஅடங்கியிரு.

- ௫௫-ம்-அதி-செங்கோன்மை-உ-ம்- செய்யுள்

வானோக்கி வாழு முலகெல்லா மன்னவன் *

கோனோக்கி வாழுங் குடி. *

உலகத்துயிர்களெல்லா மழையினால் வாழுமெனினுங் குடிகளரசன் செங்கோ லுளதாயின் வாழுமென்பதாம்

௬௪ - சான்றோரினத்திரு

சான்றோர்-பெரியோருடைய, இனத்து-கூட்டத்தில், இரு-சேர்ந்திரு.

௪௫-ம்-அதி-பெரியாரைத்துணைகோடல் கூ-ம்செய்யுள்.

தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச் *

செற்றார் செயக்கிடந்த தில் *

பெரியோரினத்திற்சேர்ந்து அவர்கருத்தின்படி நல்வழியிற் செல்லு மரசனுக்குப் பகைவராலொரு துன்பமு முண்டாகா தென்பதாம்.

௬௫-சித்திரம் பேசேல்

சித்திரம் - ஆச்சரியச் சொல்லுகளை, பேசேல் விளைகப் பேசாதே

௨௰-ம்-அதி பயனிலசொல்லாமை- ௬-ம்-செய்யுள்.

நயனில னென்பது சொல்லும் பயனில *
பாரித் துரைக்கு முரை *

பயனில்லாத சொறகளை விரித்துச் சொல்டவளை அச்சொல்லைக்கொண்டே நீதியில்லாதவ னென்றறிய லாகு மென்பதாம்

௬௰௯-சீர்மைமறவேல்

சீர்மை-சிறப்பானகாரியங்களை, மறவேல் - எப்போதும் மறவாதே

௯௮-ம்-அதி-பெருமை-௨-ம்-செய்யுள்

பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா *
செய்தொழில் வேற்றுமை யான் *

வினைவசத்தாற் பஞ்சபூத விகாரமாகிய உடம்பைப்பெற்று நின்று அதன் பயனையனுபவித்த லெல்லார்க்கு மொக்குமாயினு



ந் தொழில்களது வேறுபாட்டாற பெருமை சிறுமையென்னு ஞ் சிறப்பியல்க ளொவ்வாதென்பதாம்

௬௰௭-சுளிக்கச்சொல்லேல்

சுளிக்க-கேட்பவர் கோபிக்கும்படியாக,சொல்லேல்-ஒன் றும்பேசாதே

௬௰௫-ம்-அதி சொல்வன்மை

கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும் *
வேட்ப மொழிவதாஞ் சொல் *

நட்பாய்க்கேட்டவரைப் பின் பிரியாமற் செய்யுங் குணங்களை யுடையவாய்ப் பகையாய்க் கேளாதாரும் நட்பைவிரும்பச்சொல்லப்படுவதே சொல்லென்பதாம்

சுயஅ-சூதுவிரும்பேல்

சூது- சூதாடுதற்கு, விரும்பேல்-எப்போதும் ஆசைப்படாதே

கூச-ம்-அதி-சூது-க-ம்-செய்யுள்

வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை வென்றதூஉந் *
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று *

சூதாட்டத்தில் வென்றுகொள்ளும்பொருள் இரையென்று மீன்விழுங்கிய தூண்டிலின் முள்ளைப்போலச் சூதாடுவார் நீங்காமைக்கிடமாகிப் பின்னர் தன்னையாகிய மற்றைத் தொழில்களையெல்லாங் கெடுத்தும், பின்பு துன்பத்தைத் தருதலால் ஒருவன் றனக்குச் சூதாடுதலில் வெல்லவல்லமையிருந்தாலு மதுசெய்யாமல் விடுகவென்பதாம்

சகு-செய்வனதிருந்தச்செய்

செய்வன-செய்யுங்காரியங்களை, திருந்தச்செய் செவ்வையாகச்செய்

கஎ-ம்-அதி-தெரிந்துசெயல்வகை-உ-ம்-செய்யுள்

தெரிந்த வினத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க் *
கரும்பொருள் யாதொன்று மில *

நல்லினத்தொடு கூடியாராய்ந்து பின்பு தனித்து மாலோசித்துச் செய்பவர்க்கு முடியாத தொன்றுமில்லை யென்பதாம்.

ரூய-சேரிடமறிந்துசேர்

சேரிடம்-சேரத்தகுமிடத்தை, அறிந்து-தெரிந்து, சேர்-சேரு.

௯௰-ம் அதி-இடனறிதல்-எ ம் செய்யுள்

அஞ்சாமை யல்லாற் றுணைவேண்டா வெஞ்சாமை *
எண்ணி யிடத்தாற் செயின் *

குறைவறமுழுது மெண்ணி யிடம்பெறுதல் போல்செய்யு
மாசற்கு அஞ்சாமையொன்றே போதும் வேறுதுணை வேண
டுவதில்லை யென்பதாம்

௯௪-சையெனத்திரியேல்

சையென-சீயென்று பிறரிகழ, திரியேல்-யொல்லாங்கு
செய்து திரியாதே

உச-ம-அதி-புகழ்-௯-ம்-செய்யுள்

வசையொழிய வாழ்வாரே வாழ்வா ரிசையொழிய *
வாழ்வாரே வாழா தவர் *

பழியின்றி வாழ்வாரே உயிர்வாழ்வாரென்றும புகழின்றிவா
ழ்வாரே இறந்தவரென்றும கூறியதாம்

௯௫-சொற்சோர்வுபடேல்

சொல்-பேசுஞ்சொல்லில், சோர்வு குற்றத்தை, படேல்-
அடையாதே

எ௩-ம-அதி-சொல்வன்மை-எ-ம்-செய்யுள்

சொலல்வல்லன் சோர்வில னஞ்சா னவனை *
யிகல்வெல்லல் யார்க்கு மரிது *

இம்மூன்று குணங்களையு முடைய வனைப் பகைவராய்ப்பிரி
த்தல் பொருத்தல்செய்து வெல்லுத லொருவருக்கு மாகா தெ
ன்பதாம்

௯௬ - சோம்பித்திரியேல்

சோம்பி-சோம்பலடைந்து, திரியேல் - விருதாத்திரியாதே
௬௧-ம்-அதி- மடியின்மை-௨-ம-செய்யுள்

மடிமடிக்கொண் டொழுகும் பேதை பிறந்த *
குடிமடியுந் தன்னினு முந்து *

சோம்பலை யுட்கொண்டு நடக்கின்ற மூடன் பிறந்த குடி அவ னழிதற்கு முன்னாகவே காப்பவரில்லாம லழியுமென்ப தாம்

௫௪-தக்கோனெனத்திரி

தக்கோனென - யோக்கியனென்று சொல்லும்படியாக, திரி-பேரொடு நடந்திரி.



௯௯-ம்-அதி-சான்றாண்மை ௧-ம்-செய்யுள்

கடனென்ப நல்லவை யெல்லாங் கடனறிந்து *
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு *

நமக்குத்தகுவ திதுவென்றறிந்து சான்றாண்மையை மேற் கொண்டு நடப்பவர்க்கு நற்குணங்களெல்லா மியல்பாக விரு க்கு மென்பதாம்

௫௫-தானமதுவிரும்பு.

தானமது-சற்பாத்திரங்களிலே தானஞ்செய்தற்கு, விரு ம்பு-நீ யாசைப்படு

௨௰௩-ம்-அதி-ஈகை-௪-ம்- செய்யுள்

இன்னா திரக்கப் படுத லிரந்தவ *
ரின்முகங் காணு மளவு *

இரந்தவரது முகமலர்ச்சியைப் பார்க்குமளவும், எல்லாமிர ப்பவர்க் கியாதாயினு மொருபொருள் கொடுத்தற் கிசையா மை கூடுமோவென்னும், பயமுண்டாயிருப்பதினாலே இரத்த லேயன்றிக் கொடுத்தலுந் துன்பந்தரு மென்பதாம்.

ருசு-திருமாலுக்கடிமைசெய்

திரு-சிதேவியினுடைய நாயகனாகிய, மாலுக்கு-நாராய ணமூர்த்திக்கு, அடிமைசெய்-அடிமைபண்ணு

க-ம்-அதி-கடவுள்வாழ்த்து-அ-ம்-செய்யுள்

அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லாற் *
பிறவாழி நீந்த லரிது . *

பெரிய வறவடிவினனாகிய கடவுளது திருவடியை நினையாத வர் விரிவாகிய பொருளின்பங்களி னிச்சையை யொழிக்கமா ட்டார்க ளென்பதாம்

ருஎ-தீவினையகற்று

தீவினை-பாபத்தொழில்களை, அகற்று-எப்போதுஞ் செய் யாமல் நீக்கு

உக-ம்-அதி-தீவினையச்சம்-உ-ம்-செய்யுள்.

தீயவை தீய பயத்தலாற் றீயவை . *
தீயினு மஞ்சப் படும் . *

ஒருவன்றனக் கிதத்தைக்குறித்துச் செய்யுந்தீவினை பின்செ ன்று வருத்துவதினாலே அப்படிப்பின் சென்று வருத்துதலில் லாத நெருப்பினுங்கொடிதென்று அதற்கஞ்சவேண்டு மென் பதாம்.



ருஅ-துன்பத்திற்கிடங்கொடேல்

துன்பத்திற்கு-துன்பம்வந்துசோதறாது, இடங்கொடேல்-இடங்கொடாதே

சம்கூ-ம்-அதி-அறிவுடைமை கூ-ம்-செய்யுள்.

எதிரதாக் காக்கு மறிவினார்க் கில்லை *
அதிர வருவதோர் நோய். *

பின்வருங் கேடுதனை முன்னறிந்து விலக்குவார்க்கு ஒருதுன்பமுமில்லையென்பதாம்

ருயகூ- தூக்கிவினைசெய்

தூக்கி-முடிக்குமுபாயத்தை ஆராய்ந்தறிந்து, வினை-ஒரு தொழிலை, செய்- அதன்பின்புசெய்

கூயஅ-ம-அதி- வினைசெயல்வகை- கூ-ட-செய்யுள்

முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும் *
படுபயனும் பார்த்துச் செயல *

முடிவு முதலாகிய மூன்று மாராய்ந்து வினைசெய்க வென்பதாம்

கூய-தெய்வமிகழேல்

தெய்வம் - எல்லாருந் துதிக்கிற கடவுளை, இகழேல்-நிந்தைசெய்யாதே

அயரு-ம்-அதி-புல்லறிவாண்மை-ய-ம-செய்யுள்.

உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையா வைக்கப் படும் *

பெரியோ ருண்டென்னுங் கடவுளு மறுபிறப்பு முதலானவைகளை யில்லையென்னும் புல்லறிவாள னுலகத்திற் பேயாவானென்பதாம்

கூக - தேசத்தோடொத்துவாழ்

தேசததோடு-தேசாசாரத்தோடு, ஒத்து- விரோதமில்லாமல், வாழ்- நீ வாழு

சம்கூ-ம்-அதி-அறிவுடைமை-கூ-ம்-செய்யுள்

எவ்வ துறைவ துலக முலகத்தோ *
டவ்வ துறைவ தறிவு *

தானினைத்தபடியே நடவாம லுலகவொழுக்கத்தைத் தழுவி நடப்ப தரசனுக் கறிவாகுமென்பதாம்

## ஆத்திசூடி

கூ௰௨-தையல்சொற்கேளேல்

தையல்சொல் - பின்னே கேடுதருவதாகிய பெண்புத்தியை, கேளேல்- எப்போதுங்கேளாதே

கூ௰௧-ம்-அதி-பெண்வழிச்சேறல்-௬-ம்- செய்யுள்.

மனையாளை யஞ்சு மறுமை யிலாளன் *
வினையாண்மை வீறெய்த லின்று *

மனையாளை யஞ்சுவோனெடுத்த கரும முடிவுபெறாதென்பதாம்

கூ௩- தொன்மைமறவேல்

தொன்மை - பழமையாகிய சினேகத்தை, மறவேல் - நீ மறவாதே

அ௰௧-ம்-அதி-பழமை-முதலாம்-செய்யுள்

பழமை யெனப்படுவ தியா தெனின் யாதுங் *
கிழமையைக் கீழ்ந்திடா நட்பு *

பழமையோ ருரிமையால் தம்மைக் கேளாம லொன்றைச் செய்வதுமுதலானவை செய்தா லுடன்படுமெநட்பே பழமையாகு மென்பதாம்

கூ௰௪-தோற்பனதொடரேல்

தோற்பன-தோற்கும் வழக்குகளில், தொடரேல்- சம்பந்தப்படாதே

௪௰௭-ம்-அதி-தெரிந்துசெயல்வகை- ௪-ம்-செய்யுள்.

தெளிவி லதனைத் தொடங்கா ரிளிவென்னு *
மேதப்பா டஞ்சு பவர் *

இகழ்ச்சியைஅஞ்சுவோர் துணியப்படாதகாரியத்தைச் செய்யத் தொடங்காரென்பதாம்

௬௫- நன்மைகடைப்பிடி

நன்மை - நலமுள்ளவைகளை, கடைப்பிடி - உறுதியாகப் பிடி.

௯௰௬-ம்-அதி-குடிமை- ௮-ம்- செய்யுள்

நலத்தின்க ணாரின்மை தோன்றி னவனைக் *
குலத்தின்க ணையப் படும் *

குலநலமுடையவனிடத்து அன்பில்லாமை தோன்றுமாயின் அதனாலவனை யதகுலப்பிறப்பி லுலகத்தார் சந்தேகப்படுவரென்பதாம



௬௬- நாடொப்பனசெய்

நாடு-நாட்டிலுள்ளவர் பலரும், ஒப்பன - ஒத்துக்கொள்ளத்தக்க-நல்லகாரியங்களை, செய்-நீ செய்

௬௰௪-ம்-அதி-அமைச்சு-௭-ம-செய்யுள்

செயற்கை யறிந்தக் கடைத்து முலகத் *
தியற்கை யறிந்து செயல் *

மந்திரியானவன் செய்வதுநூல்வழியேயாயினு முலகநடையோடு பொருந்தச் செய்யக்கடவனென்பதாம

கூ௰எ-நிலையிறபிரியேல்

நிலையின்-நிறகின்ற நிலையிலிருந்து, பிரியேல்-எப்போதும் நீங்காதே

கூ௰எ-ம்-அதி-மானம-ச-ம-செய்யுள

தலையி னிழந்த மயிரனையர் மாந்தா
நிலையி னிழந்தக் கடை.

தாம் உயாந்த நிலையினின்றுந் தாழ்ந்தோர் அந்நிலைவிடாது நின்றபோது விருமயப்படுதலாலும விடடுத்தாழ்ந்தபோ திகழப்படுதலாலுந் தலையினிங்கிய மயிரா யொப்ப ரென்பதாம்

கூ௰அ-நீர்விளையாடேல்

நீர்-ஆழமுள்ளநீரிலே,விளையாடேல்- நீந்திவிளையாடாதே

சமச-ம்-அதி-குறறங்கடிதல்- ச-ம- செய்புள்

குற்றமே காககப் பொருளாகக குறறமே
யறறந் தரூஉம் பகை

குற்றந் தனக்கழிவைத்தரும் பகையாதலா லதனை யொழிக்க வேண்டுமென்பதாம்

கூ௰கூ- நுண்மைநுகரோல்

நுண்மை-நோயைததருகிற சிற்றுண்டிகளை, நுகரோல்- உண்ணாதே.

கூ௰டு-ம்-அதி-மருந்து-கூ-ம செய்புள்

இழிவறிந் துண்பான்க ணின்பம்போ னிற்குங்
கழிபே ரிரையான்க ணோய்

உணவைக் குறைவற வுணபவ னிடத்தி லின்பம் நீங்காமை போல அதிகமாக வுணபவனிடதது நோய்நீங்கா தெனபதாம.

௭௰- நூற்பலகல்

நூற்பல - அறிவைவளர்க்கிற நூல்கள் பலவற்றையும்,கல்- கற்றுக்கொள்ளு

௭௱௨௰௫-ம-அதி-அவையஞ்சாமை-௫-ம்-செய்யுள்.

ஆற்றி னளவறிந்து கற்க வவையஞ்சா *
மாற்றங் கொடுத்தற் பொருட்டு *

மந்திரிகள் வேற்று வேந்தர் சபையி லஞ்சா தெதிர்மொழி கொடுத்தற்பொருட்டு அளவைநூலைவழுவறக்கற்கவென்பதாம்

௭௧-நெற்பயிர்விளை

நெற்பயிர்-நெல் லுப்பயிரை, விளை-நீவேண்டியமுயற்சி செய்து விளை

௱௪-ம்-அதி-உழவு-௩-ம்- செய்யுள்

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாந் *
தொழுதுண்டு பின்செல் பவர் *

உழுதுபயிர்செய்து அதிலுண்டு வாழ்கின்றவரே தமக்கு ரியவொன்றும் சும்மையொத்த மனிதனைவணங்கி அவர் கொடுக்க வாங்கியுண்டு வாழ்கின்றவர் தமக்குரிய ரல்லவொன்றுஞ் சொல்லியதாம்

௭௨-நேர்பட வொழுகு.

நேர்பட-செவ்வையான நடையுற, ஒழுகு-விதிவழியிலே நட

௧௪-ம்-அதி-ஒழுக்கமுடைமை-௬-ம்-செய்யுள்

ஒழுக்கத்தி னெல்கா ருரவோ ரிழுக்கத்தி *
னேதம் படுபாக் கறிந்து *

மனவுறுதியை யுடையவர் தம்மொழுக்கங் குறைவுபடி னி ழிகுலத்தா ராவோமென் றறிந் தொழுக்கத்திற் சிறிதும் வழு வா வென்பதாம்

௭௩-நைவனநணுகேல்

நைவன-பின்வருத்த மடையத்தக்கவைகளை, நணுகேல்-சேராதே.

௨௧-ம்-அதி-தீவினையச்சம்-௬-ம்-செய்யுள்

தீப்பால தான்பிறர்கட் செய்யற்க நோய்ப்பால *
தன்னை யடல்வேண்டா தான் ......... *



நோய்செய்யும் பாவங்களாற் பின் வருந்தப்படாதிருக்க வெண்ணினவன் பிறனிடத்துத் தீவினைகளைச் செய்யலாகா தென்பதாம்

௭௪-நொய்யவுரையேல்

நொய்ய-அற்பமாகிய சொல்லுகளை, உரையேல்-சொல் லாதே

௨௰-ம்-அதி-பயனிலசொல்லாமை-௰-ம்-செய்யுள்.

சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க *
சொல்லிற் பயனிலாச் சொல் *

ஒருவன் சொல்லத்தக்கது பயனுடைய சொல்லென்றுஞ் சொல்லத்தகாதது பயனில்லாத சொல்லென்றுங் கூறியதாம்

௭௫-நோய்க்கிடங்கொடேல்

நோய்க்கு-வியாதிகளுக்கு, இடங்கொடேல்- அவபத்திய முதலானவைகளைச் செய்து இடங்கொடாதே

கடு-ம் அதி-மருந்து-உ-ம்-செய்யுள்

மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய . . *
தற்றது போற்றியு ணின் . *

ஒருவன் முன்னுண்டதற்றபடியை யதிக பசிமுதலாகிய குறிகளா லறிந்து பின்னுண்பானாயி னவனுடம்பிற்குப் பிணியில்லை யென்பதாம்

எக-பழிப்பனபகரேல்

பழிப்பன-பிறர் உன்னைப் பழிக்குஞ் சொற்களை, பகரேல்-பேசாதே

கஎ-ம்-அதி-மானம் க-ம்-செய்யுள்

இல்பி றமையாச் சிறப்பின வாயினுங்
குன்ற வருப விடல் *

தங்குடிப்பிறப்புத் தாழவருஞ் செயல்களைச் செய்யாவிட்டால் அதனாலேதமக்குமரணம் வருமாயினும் அவைகளைச் செய்யாதிருக்கக்கடவ ரென்பதாம்

எஉ-பாம்பொடுபழகேல்

பாம்பொடு-பால்கொடுத்தவர்க்கும் விஷந்தருகிற பாம்புக்கொப்பானவரோடு, பழகேல்-சவாசஞ்செய்யாதே

உஉ. ஆத்திசூடி.

அகு-ம்-அதி-உட பகை-ம-ம்-செய்யுள்.

உடம்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருட் *
பாம்போ டுடனுறைந் தற்று *

உட்பகையாயினரோடு கூடிவாழ்வோன் ஒரு குடிசையுள் நாகப்பாம்போடுகூட விருப்பவர் இடச்சிறுமையாலும் பழகத்தாலும் நிச்சயமாகக் கடிக்கப்பட் டழிதல்போல அவரா லழிவை யடைதற் கையமில்லை யென்பதாம்

எஅ-பிழைபடச்சொல்லேல்.

பிழைபட - குற்றமுண்டாக, சொல்லேல் - ஒன்றையுஞ் சொல்லாதே

சுஙு-ம்-அதி-சொல்வன்மை-உ-ம் செய்யுள்

ஆக்கமுங் கேடு மதனால் வருதலாற் *
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு *

நற்சொல்லினாற் செல்வமுந் தீச்சொல்லினாற் கேடும் வருதலால் தனது சொல்லிற் சோர்வுவராமற் காக்கக்கடவ னென்பதாம்

எகூ-பீடுபெறநில்

பீடு - பெருமையை, பெற-அடைய, நில் - நல்வழியிலே நில்லு.

கூஅ-ம்-அதி-பெருமை-சு-ம்-செய்யுள்

ஒருமை மகளிரே போலப் பெருமையுந் *
தன்னைத்தான் கொண்டொழுகி னுண்டு *

நிறையின்வழுவாமல்தன்னைத்தான் காதலாகக்கொண்டு நடப்பவனுக்குப் பெருமையுண்டாகு மென்பதாம்.

அ௰-புகழ்ந்தாரைப்போற்றிவாழ்.

புகழ்ந்தாரை- உன்னைத்துதிசெய்து அடுத்தவரை, போற்றி-கைவிடாமற் காப்பாற்றி, வாழ்-நீ வாழ்

௫௱-ம்-அதி-சுற்றந்தழால்-௯-ம-செய்யுள்

கொடுத்தலு மின்சொலு மாற்றி னடுக்கிய *
சுற்றத்தாற் சுற்றப் படும் *

ஈகையு மின்சொலு முடையவனைத் தமக்குள்ளே ஒருவர்க்கொருவ ரடுக்காக தொடர்ந்துநின்ற சுற்றத்தாரெல்லாருஞ் சூழ்வ ரென்பதாம்.



௪௧ பூமிதிருத்தியுண்

பூமி நிலத்தை, திருத்தி-சீர்திருத்திப் பயிர்செய்து, உண்-உண்ணு.

௱௯-ம-அதி-உழவு-௫-ம-செய்யுள்.

இரவா ரிரப்பார்க்கொன் றீவார் கரவாது *
கைசெய்தூண் மாலை யவர் *

பயிர்செய்துண்ணு மியல்பினோர் பிறரைத் தாமிரவா தம்மை இரப்பவர்க்கு அவர் வேண்டிய தொன்றை இல்லையென்

னுமற கொடுத்துக் கீர்த்திபெற்று வாழ்வா ரென்பதாம்.

௪௨-பெரியாரைத்துணைகொள்

பெரியாரை-அறிவிற்சிறந்த பெரியோரை, துணை- உனைச்

குத்துணையாக, கொள்-செய்துகொள்ளு

௪௫-ம-அதி-பெரியாரைத்துணைக்கோடல்-௩-ம்-செய்யுள்

அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப் *
பேணித் தமராக் கொளல் *

அரசனுக்குப் பெரியாரைத் துணைக்கொள்ளுத லெல்லாப் பேறுகளுள்ளு மரிதாகு மென்பதாம்

௮௫-பேதைமையகற்று

பேதைமை-அறிவிலாமையை, அகற்று- உனக்குள்ளிராமல் நீக்கு

௩௬-ம்-அதி-மெய்யுணர்தல்-௮ம் செய்யுள்

பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ் *
செம்பொருள் காண்ப தறிவு *

பிறவிக்கு முதற்காரணமாகிய வஞ்ஞானங்கெட முத்திக்கு நிமித்தகாரணமாகிய மெய்ப்பொருளை யறிவதே யறிவாகு மென்பதாம்

௮௬-பையலோடிணங்கேல்

பையலோடு-சிறுபிள்ளைகளோடு, இணங்கேல்-நீசகவாசஞ் செய்யாதே

௪௬-ம்-அதி-சிற்றினஞ்சேராமை-௰-ம்-செய்யுள்

நல்லினத்தி னூங்குந் துணையில்லைத் தீயினத்தி *
னல்லற் படுப்பதூஉ மில் . . . . *

ஒருவனுக்கு நல்வினைத்தின் மேறபடுந் துணையுந் தீயினைத்தின் மேறபடும் பகையுமில்லை யென்பதாம்

அ௫-பொருடனைப்போறறிவாழ்.

பொருடனை - திரவியத்தை, போறறி-காப்பாற்றி, வாழ்-நீ வாழு.

உ௩-ம்-அதி-அருளுடைமை-எ-ம்-செய்யுள்

அருளில்லார்க் கவ்வுலக மில்லை பொருளில்லார்க் *
கிவ்வுலக மில்லாகி யாங்கு *

பொருளுடையார்கு இவவுலகத்தின்பங் கிடைப்பதுபோல வருளுடையவாககே யவவுலகத்தின்பங் கிடைககு மென்பதாம்

அ௬-போர்த்தொழில்புரியேல

போர் - சணடையாகிய, தொழில்-தொழிலை, புரியேல்-செய்யாதே

அ௬-ம்-அதி-இகல்-உ-ம்-செய்யுள்

பகல்கருதிப் பற்று செயினு மிகல்கருதி *
யின்னு செய்யாமை தலை *

தம்மோடு கூடாமையை யெண்ணி யொருவன் வெறுப்பவைகளைச் செய்தாலும் அவனோடு மாறுபடவெண்ணி அவனுக்குத் துன்பங்களை செய்யாமையால் தாமுயர்வடைவ ரென்பதாம்

அஎ-மனந்தடுமாறேல்.

மனம்-மனது, தடுமாறேல் - யாதொருவிஷயத்திலுங் கலங்காதே

கூ-ம்-அதி-இடுக்கணழியாமை-எ-ம்-செய்யுள்

இலக்க முடம்பிடும்பைக் கென்று கலக்கத்தைக் *
கையாறுக் கொள்ளாதார் மேல் *

துன்பத்துக் கிடங்கொடுத்தா லுடம்பழியுமென் றறிந்தவர் துன்பம்வரி னதனைத் துன்பமாகக் கொள்ளா ரென்பதாம்.

௮௮-மாற்றானுக்கிடங்கொடேல்

மாற்றானுக்கு-பகையாளிக்கு, இடங்கொடேல் - உன்னை நெருங்கிப் பின்வருத்தும்படியாக இடங்கொடாதே



௮௯-ம்-அதி-உட்பகை-௨-ம் செய்யுள்

வாள்போல் பகைவரை யஞ்சற்க வஞ்சுக *
கேள்போல் பகைவர் தொடர்பு *

முன்னே யறிந்து காக்கப்படுதலால் வெளிப்பட நிற்கும் பகைவரை யஞ்சுத லொழிகவென்றும், அவ்வாறறியவுங் காக்கவுங் கூடாமையால் கெடுதற் கையமில்லை யென்பதுபற்றி உட்பகைவர் நடபை யஞ்சுகவென்றுஞ் சொல்லியதாம்

௮௯-மிகைபடச்சொல்லேல்

மிகைபட-சொல்லத்தகுவதற்கு அதிகமாக, சொல்லேல்-சொல்லாதே.

௨௰-ம்-அதி-பயனிலசொல்லாமை-௯-ம்- செய்யுள்

பொருடீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருடீர்ந்த *
மாசறு காட்சி யவர் . *

மயக்கத்தி னிங்கிய மெய்யறிவை யுடையவர்கள் பயனற்ற சொற்களை மறந்துஞ் சொல்லமாட்டா ரென்பதாம்

௬௰- மீதுண விரும்பேல்

மீதூண்- அதிகபோசனத்துக்கு, விரும்பேல் நீ ஆசைப் படாதே

௯௱௪௰௬-ம்-அதி மருந்து-எ-ம்-செய்யுள்

இழிவறிந் துண்பான்க ணின்பம்போ னிற்கும் *
கழிபே ரிரையான்க ணோய் *

ஒருவன் தன் சரீரகுணமு மதற்கேற்றவுணவு முரியகாலமு மாராயாமல் வேண்டியதோருணவை உதராக்கினியி னளவல் லாம லதிகமாக வுண்டா லளவில்லாத நோய்களை யடைவ னென்பதாம்

௬௰௧ முனைமுகத்து நில்லேல்

முனைமுகத்து-சண்டை முகத்திலே, நில்லேல்-போய் நில் லாதே

௪௱௨௰௨-ம்-அதி-அறி வுடைமை-உ-ம் செய்யுள்

சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ *
நன்றின்பா லுய்ப்ப தறிவு *

மனத்தை அதுபோம் வழியிற் போகவிடாமல் தீங்குள்ளதி லே நீக்கி நன்மையுள்ளதிலே செலுத்துவ தறிவென்பதாம



௬௰௨-மூர்க்கரோடிணங்கேல்

மூர்க்கரோடு- அறிவில்லா தவருடன், இணங்கேல்- நட்பு செய்யாதே

௮௱௨-ம்-அதி-தீநட்பு முதலாம் செய்யுள்.

பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை • *
பெருகலிற குன்ற லினிது *

பிருந்த வாசை யுடையவர்போ லிருந்தாலும் தீக்குண முடையவர் நட்புவளர்தலால் வருங்கேடு குறைந்தால் வாராமையாற் குறைதலே நன்றென்பதாம்

கூ௧௯-மெல்லியாடோள்சேர்

மெல்லியாள் - உன்மனையாளுடைய, தோள்-தோள்களே, சேர்-சேரு

ராய்க ம்-அதி-புணர்ச்சிமகிழ்தல் ரு ம்-செய்யுள்.

தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொ *
ருமரைக் கண்ணா னுலகு - *

தாம் விரும்பிய பெண்களின் மெல்லிய தோள்களிடத்துத் துயிலபோல விஷ்ணுவினுலகம் இன்பமாகுமோவென்பதாம்

கூ௧௪- மேன்மக்கள் சொற்கேள்

மேன்மக்கள்-உயர்ந்தோருடைய, சொல் சொல்லை,கேள் கேளு

சம௨-ம்-அதி-கேள்வி ௫ ம்-செய்யுள்

இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே *
யொழுக்க முடையார்வாய்ச் சொல் *

சேறுநிலத்திற் கூன்றுகோல்போல வொழுக்கமுடையவர் சொல ஆபத்துவேளைக குதவுமென்பதாம்

கூ௫ மைவிழியார்மனையகல்

மைவிழியார- பரத்தையருடைய, மனை-வீட்டில், அகல் சேராதே

கூ௰௨-ம்-அதி வரைவின்மகளிர்-௰-ம் செய்யுள்

திருமனைப் பெண்டிருங் கள்ளுங் கவறுந் *
திருநீக்கப் பட்டார் தொடர்பு .. .. *
திருவினாலே நீக்கப்பட்டவரை அவருக்கு நட்பாகும் பரத்
தையருங் கள்ளுஞ் சூதுமாகிய விக்குறிகளா லறியப்படுமென்
பதாம்

ஆத்திசூடி உள

கயஅ-மொழிவதற மொழி

மொழிவது-சொல்வதை, அற-சந்தேகமற, மொழி சொ
ல்லு.

கயஅ ம்-அதி சொல்வன்மை-ச-ம்-செய்யுள்

பலசொல்லக் காமுறுவர் மன்றமாசற்ற *
சிலசொல்ல றேற்றா தவர் *

குற்றமற்ற சிலசொற்களைச் சொல்லுதலை யறியாதவர் பல
சொற்களைச் சொல்ல விரும்புவரென்பதாம்.

கயஎ-மோகத்தைமுனி

மோகத்தை மயக்கத்தை, முனி கல்வியறிவைக் கொண்டு
நீக்கு

ருயகூ ம்-அதி மெய்யுணர்தல் ௰-ம்-செய்யுள

காமம் வெகுளி மயக்க மிவைமூன்றி *
னாமங்கெடக் கெடு நோய் *

காமம்வெகுளிமயக்கமென்னு முக்குற்றங்களையுங் கெடுத்த
வர்களுக் கவைகளின் காரியமாகிய வினைப்பயன்க ளில்லை யெ
ன்பதாம்.

கூஅ வல்லமைப்பேசேல்

வல்லமை உனக்குள்ள வல்லமையை, பேசேல் புகழ்ந்து
பேசாதே

அ௫-ம்-அதி-புல்லறி வாண்மை-ரு-ம்-செய்யுள்
கல்லாத மேற்கொண் டொழுகல் கசட ற *
வல்லதூஉ மையந் தரும் *

புல்லறிவாளர்தாங் கல்லாதநூல்களேயுங் கற்றாராக மேற்கொண்டுநடத்தல் அவர் கற்றதொரு நூலுண்டாயின் அதுவுமிப்படிதானோவென்று பிறர்க்கையநதை விளக்குமென்பதாம்

கூ௰கூ வாது முற் கூறேல்.

வாது வாதுகளே, முன் - பெரியோர் முன்னே, கூறேல்-பேசாதே

எ௰௨-ம்-அதி- அவையறிதல்- ரு-ம் செய்யுள்
நனநென் றவற்றுள்ளு நன்றே முதுவருண். *
த்து கிளவாச செறிவு ........ .. . *

௨-அ

ஆத்திசூடி.

பெரியோர்சபையி லவர்க்குமுற்பட்டொன்றைச்சொல்லாத வடக்கம் ஒருவனுக்குப் பலநற்குணங்களினு முயர்ந்ததாகுமென்பதாம்.

௱- வித்தைவிரும்பு

வித்தை - கல்வியைககற்கிறதற்கு, விரும்பு - ஆசைப்படு

௬௰-ம் அதி கல்வி- அ-ம செய்யுள்.
ஒருமைக்கட் டாங்கற்ற கல்வி யொருவற் *
கெழுமையு மேமாப் புடைத்து *

ஒருவ னொருபிறப்பிற்கற்ற கல்வியானது அவனுககெழுபிறப்பினுஞ் சென்று துணையாமென்பதாம்.

௱க-வீடுபெறநில்.

வீடு மோட்சத்தை, பெற-அடைய,நில்- ஞானவழியிலே நில்லு.

௩௰௫-ம் அதி-துறவு-௩ ம் செய்யுள்

அடல்வேண்டு மைந்தின் புலத்தை விடல்வேண்டும் *
வேண்டிய வெல்லா மொருங்கு *

முத்தியை விரும்பினவர் ஐம்புலன்களையும் வென்று தா மு ன்பு அநுபவித்தற்குப் படைத்த பொருளனைத்தையு மொரே தரமாகத் துறத்தல் வேண்டுமென்பதாம்

௩௨- உத்தமனாயிரு

உத்தமனாய்- பலகுணங்களிலும் நன்மை யுடையவனாகி, இரு-நீஇரு

௱-ம்-அதி-பண்புடைமை-௪-ம்-செய்யுள்

நயனொடு நன்றி புரிந்த பயனுடையார் *
பண்பு பாராட்டு முலகு *

நீதியொடு தருமத்தை விரும்புதலுந் தமக்கும் பிறர்க்கும் பயன்படுதலு முடையவர் குணத்தை யுலகத்தார் கொண்டா டுவ ரென்பதாம்.

௩௩-ஊருடன்கூடிவாழ்.

ஊருடன்- ஊரிலுள்ளவருடன், கூடி - சேர்ந்து, வாழ்- வாழு

௪௰௩-ம்-அதி அறிவுடைமை-௬-ம்-செய்யுள்.

எவ்வ துறைவ துலக முலகத்தோ .. .. . *
டவ்வ துறைவ தறிவு ..................................... *



தானினைத்தபடியே நடவாம லுலகவொழுக்கத்தைத் தழுவி நடப்ப தரசனுக்கறிவாகு மென்பதாம்

௩௪- வெட்டெனப்பேசேல்

வெட்டென-கத்திவெட்டைப்போல,பேசேல்- கடினமா கப் பேசாதே.

௫௮-ம்-அதி-கண்ணோட்டம்-௯-ம்- செய்யுள்

ஒறுத்தாற்றும் பண்பினார் கணணுங் கணணோடிப் *
பொறுத்தாற்றும் பணபே தலை *

தம்மை வருத்தினவோர் மேலுந் தாக்ஷிண்யஞ் செய்து அக் குறறத்தைப் பொறுத்தலே அரசர்க்குப் பிரதான குணமாகு மென்பதாம்

௮௫- வேண்டிவினைசெயேல்

வேண்டி- ஒருபிரயோஜனத்தை இச்சித்து, வினை- தீங்கா னசெயலை, செயேல்- ஒருவருக்குஞ் செய்யாதே

௩௨-ம்-அதி-இன்னாசெய்யாமை- முதலாம்- செய்யுள்

சிறப்பீனுஞ் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா *
செய்யாமை மாசறறார் கோள் *

பிறர்க்குத் துன்பங்களைச்செய்து சிறப்பைத்தரும் அணிமா முதலிய செல்வங்களைப் பெறலாமாயினும் காமவெகுளிமயக் கமென்னுங் குறறங்க ளொழிந்தவர் அவைகளைச் செய்யா ரெ ன்பதாம்.

௮௬-வைகறைத்துயிலெழு

வைகறை- விடியற்காலத்திலே, துயில்-தூக்கத்தைவிட்டு, எழு-எழுந்திரு.

இஃது விடியுமுன்னம் நித்திரையை விட் டெழுந்திராதார்க் கு அறிவுவிளக்க மின்மையின் இங்ஙனங்கூறியது.

அ௰-ம்-அதி-புல்லறிவாண்மை - முதலாம்-செய்யுள்

அறிவின்மை யின்மையு ளின்மை பிறிதின்மை *
யின்மையா வையா துலகு *

அறிவின்மை-அறிவில்லாமை-இன்மையுள்- இன்மைபலவுள் ளும்-இன்மை-மிகுந்த இல்லாமையாம்-பிறிதின்மை-மற்றைப் பொரு ளில்லாமையோ வெனின் (அதனை) உலகு-உலகத்தார் இன்மையா (அப்படிப்பட்ட) இல்லாமையாக-வையாது-கொள்ளார்.

௱௪௰ ஆத்திசூடி.

௱௭-ஒன்னாைச்சேரேல்

ஒன்னாை-பகைவரை, சேரேல்-எக்காலத்திலுஞ்சேராதே

அமைக-ம்-அதி-கூடாநட்பு- அ-ம்-செய்யுள்

தொழுதகை யுள்ளும் படை யொடுங்கு மொன்னா *
ரழுத கண்ணீரு மனைத்து *

பகைவர் தமது மெனிவைக் காட்டித் தொழுதாலு மழுதாலு மவாகுறிப்பை நோககிக் காக்கவென்பதாம்

௱௮- ஓரஞ்சொல்லேல்

ஓரம்- பக்ஷபாதம், சொல்லேல்- நீ யாதொரு வழக்கிலுஞ் சொல்லாதே

௰௨-ம்-அதி-நடுவுநிலைமை-அ-ம்- செய்யுள்.

சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற் *
கோடாமை சான்றோர்க் கணி *

முன்னே தான் சமனாகநின்று தன்னிடத்து வைத்த பொருளை அளவுசெய்யுந் தராசுபோல விவ்விலக்கணங்களைப்பொருந்தி யாவர்க்கு மொப்பச சொல்வது பெரியோர்களுக் கழகென்பதாம்.

ஔவையார் - அருளிச்செய்த

நீதிநூலாகிய

# ஆத்திசூடி.

முற்றிற்று.



உ

நாயனார்துணை

ஔவையார்

அருளிச்செய்த

# கொன்றைவேந்தன்

குறளுதாரணத்துடன்

மூலமும்-உரையும்

கடவுள் வாழ்த்து

கொன்றைவேந்தன்-செல்வனடியிணை *
யென்றுமேத்தித்-தொழுவோமியாமே *
(இதன்பொருள்)

கொன்றை - கொன்றைப்பூமாலையைச் சூடிய, வேந்தன்-தலைவனாகிய பரமசிவனுக்கு, செல்வன்- புத்திரனாகிய விநாயகரது, அடியிணை - இரண்டு பாதங்களையும், என்றும் - எந்நாளும், ஏத்தி துதிசெய்து, தொழுவோம்-வணங்குவோம், யாம்-யாங்கள்.

க-அன்னையும்பிதாவு முன்னறிதெய்வம்

அன்னையும்-தாயும், பிதாவும்-தகப்பனும், முன்னறி-முன் காணப்பட்ட, தெய்வம்-தெய்வங்களாவார்

க-ம-அதி-கடவுள்வாழ்த்து-க-ம்-செய்யுள்

அகர முதல வெழுத் தெல்லா மாதி *
பகவன் முதற்றே யுலகு *

(இதன் தாற்பரியம்) நாதமாத்திரமான வியல்பினாலே பிறத்தலால் அகரம்- எல்லா வெழுத்திற்குந் தலைமையதாக விருத்தலபோல இயற்கையறிவினாலேமுழுது மறிதலால் ஆதிபகவன் உலகத்திற்குத் தலைவனாக விருக்கின்றானென்பதாம்.

உ- ஆலயந்தொழுவது சாலவுநன்று

ஆலயம் - கோயிலுக்குப் போய், தொழுவது - கடவுளை வணங்குவது, சாலவும்-மிகவும், நன்று-நல்லதாகும்.

ருசு-ம்-அதி-பொச்சாவாமை-அ-ம் செய்யுள்.

புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டுஞ் செய்யா *
திகழ்ந்தார்க் கெழுமையு மில் . . *

நீதிநூலுடையார் புகழ்ந்தவைகளைச் செய்யாது மறந்தவர்களுக்கு எழுபிறப்பிலு மின்பமில்லையென்பதாம்

ஙூ-இல்லறமல்லது நல்லறமன்று

இல்லறம்- மனையாளோடு கூடிச்செய்யு மில்லறமானது, நல்லறம் எளிதிற்செய்யத்தகும் அறமாகும் அல்லது-இல்லறமல்லாத துறவறமானது-அன்று-எளிதிற்செய்யத்தகும் அறம் அன்றாகும்

ரு-ம்-அதி இல்வாழ்க்கை-சு-ம்-செய்யுள்

அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை யஃதும் . . *
பிறன் பழிப்ப தில்லாயி னன்று . *

இருவகையறத்தினு மில்லறமே சிறப்புடைய தென்பதாம்.

சு- ஈயார்தேட்டைத் தீயார்கொள்வர்

ஈயார்-கொடாதவருடைய,தேட்டை - சம்பாத்தியத்தை, தீயார்-கள்ளர்முதலானதீயவர்-கொள்வர்-அவர் துன்பப்படும்படி அபகரிப்பார்

ரசு-ம அதி-நன்றியில்செல்வம்-சு-ம்-செய்யுள்.

ஏதம் பெருஞ்செல்வந் தான்றுவ்வான் றக்கார்க்கொன்
றீத லியல்பிலா தான் *

தானு மனுபவியாமல் யோக்கியர்க்குங் கொடாமலிருக்கின் றவ னவ்விரண்டுஞ் செய்தற் கிடமுடைய செல்வத்திற்கு நோயாகு மென்பதாம்.

டு-உண்டிசுருங்குதல் பெண்டிர்க்கழகு

உண்டி-சாப்பாடு,சுருங்குதல்- அளவிற்குறைதல், பெண்டிர்க்கு- பெண்டுகளுக்கு, அழகு அழகாகும்.

சு-ம்-அதி வாழ்க்கைத் துணைநலம்- முதலாம்-செய்யுள்.

மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான் *
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை *

கொன்றைவேந்தன் ருரு

நற்குண நற்செய்கைகளையுடையவளாய் வரவுக்கேற்ற செலவுசெய்யு மனையாளே யொருவ னில்வாழ்க்கைக்குத் துணையாவ ளென்பதாம்

சு-ஊருடன்பகைக்கின் வேருடன்கெடும்

ஊருடன்-தானிருக்குமூராருடன்,பகைக்கின் ஒருவன்விரோதித்தால்,வேருடன்-தன்வமிசத்துடன், கெடும- அவன் கெடுவான்.

அஅ-ம்-அதி-பகைத்திறந்தெரிதல் ரு-ம்- செய்யுள்

வழுத் தவரினு மேழை தமியனாய்ப் *
பல்லார் பகைகொள் பவன் *

சுற்றம் நட்பு படை முதலாகிய துணையிருந்த விடத்தும் வெல்லுதல் சந்தேகமாகவிருக்க அத்துணையின்றித் தனியனாயிருந்து பலரோடு பகைகொள்பவனும் பித்தருமயக்கதாமலோப்பாராயினும் இவரதனை லழிவடையாமை யாலும் அவனழிவடைதலாலும் அவன் பித்தனாககாட்டினும் புத்தியில்லாதவனுவனென்பதாம்

எ-எண்ணுமெழுத்துங் கணெனத்தகும்

எண்ணும் - கணிதநூலும், எழுத்தும் - இலக்கணநூலும், கண்ணெனத்தகும்-மனிதருக்கு இரண்டுகண்களென்று சொல்லப்படும்.

குறள்-ம்-அதி-கல்வி-உ-ம்-செய்யுள்

எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங் *
கண்ணென்ப வாழு முயிர்க்கு *

அறநூன்முதலியவைகளை யறிதற்குக் கணிதநூலுமிலக்கணநூலுங் கருவியாகு மென்பதாம்.

அ-எவாமக்கண் மூவாமருந்து

எவா பெற்றவர் இது செய்யென்பதற்குமுன் குறிப்பறிந்து செய்கிற, மக்கள்-பிள்ளைகள், மூவாமருந்து-அப்பெற்றவர்களுக்குத் தேவாமிர்தத்திற் கொப்பாவார்

எக-ம்-அதி குறிப்பறிதல்-கூ-ம்-செய்யுள்

குறிப்பிற் குறிப்புணர் வாரை யுறுப்பினுள் *
யாது கொடுத்துங் கொளல். ... .. ... *

தன்குறிப்பறிதலாற் பிறர்குறிப்பறியுந் தன்மையுடையோ



ரைப் புறத்துறுப்பாகிய நாடு முதலானவைகளி லெதன்றைக் கொடுத்தாயினும், துணையாகக்கொள்க வென்பதாம்.

க-ஐயப்புகினுஞ் செய்வனசெய்

ஐயம்புகினும் - பிச்சையெடுத்தாலும், செய்வன - செய்யத்தகும் கருமங்களை, செய்-விடாது செய்வாயாக.

கஅ-ம் அதி பெருமை-ரு ம் செய்யுள்

பெருமை யுடையவ ராற்றுவா ராற்றி . . . *
அருமை யுடைய செயல் . *

பெருமையை யுடையோர் வறுமையடைந்தபோதும், பிறரால் செய்தற்கரியசெயல்களைச செய்யமுடிப்ப ரென்பதாம்

ம-ஒருவனைப்பற்றி யோரகத்திரு

ஒருவனை-நற்குணமுடைய ஒருவனை, பற்றி-துணையாகப் பற்றிக்கொண்டு, ஓரகத்து - ஓரிடத்திலேதானே, இரு-எப்போதும் வாசம்பண்ணு.

சகு-ம்-அதி சிற்றினஞ்சேராமை ம-ம்-செய்யுள்.

நல்லினத்தி னூங்குந் துணையில்லைத் தீயினத்தி *
னல்லற் படுப்பதூஉ மில் . *

ஒருவனுக்கு நல்லினத்தின்மேற்படுந் துணையும், தீயினத்தின் மேறபடும் பகையு மில்லை யென்பதாம்.

மக-ஓதலினன்றே வேதியர்கொழுக்கம்

ஓதலின் - வேதமோதலினும், நன்றே-நலலதே, வேதியர்க்கு-பார்ப்பாருக்கு, ஒழுக்கம்-ஆசாரம்

மச-ம்-அதி-ஒழுக்கமுடைமை-ச-ம்-செய்யுள்.

மறப்பினு மோத்துக கொளலாகும் பார்ப்பான் *
பிறப்பொழுக்கங் குன்றக கெடும் *

பிராமணன் றான்கற்ற வேதத்தை மறந்தானாயினுந் தன்வருணங்கெடாமையாற் பின்னு மதனைக் கற்றுககொள்ளலாந் தன்னொழுக்கத்தை விடுவானாயி னவனுடைய வுயர்ந்த வருணங் கெடு மென்பதாம்

௯௨- ஔவியம்பேசுத லாக்கத்திற்கழிவு.

ஔவியம்-பொறாமைச்சொல்லுகளை, பேசுதல்-ஒருவனை நோக்கிப் பேசுதல், ஆக்கத்திற்கு- அவன்செல்வத்திற்கு, அழிவு-கேட்டைத்தருவதாகும்.



* ௩௰௭-ம்-அதி-அழுக்காறாமை-௭-ம்- செய்யுள்

அவ்வித்தழுக்கா றுடையானைச் செய்யவ . . . . *
டவ்வையைக் காட்டி விடும் . . . *

பிறர் செல்வங்கண்டு பொறாமைப் படுகின்றவனைத் திருமக ளானவள் மூதேவியினிடத்துச் சேர்த்துத் தானீங்கிவிடுவ ளென்பதாம்

௯௩-அம்கமுங்காசுஞ் சிக்கெனத்தேடு

அம்கமுந் தானியத்தையும், காசும்- திரவியத்தையும், சிக்கெனதேடு-வீண்செலவு செய்யாமற் சம்பாதி

௭௬-ம்-அதி-பொருள்செயல்வகை-௨-ம்- செய்யுள்.

இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை *
யெல்லாருஞ் செய்வர் சிறப்பு *

எல்லா நன்மையு முடையராயினும் பொருளில்லாரை யெல்லாரு மிகழ்வரென்று மெல்லாத் தீங்கையுமுடையராயினும், பொருளுடையவரை யெல்லாரு முயர்த்துவ ரென்றுஞ் சொல்லியதாம்.

௯௪-கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை

கற்பெனப்படுவது- பெண்டுகளுக்குக கற்பென்று சொல்லப் படுவது, சொல்-கணவர்சொல்லுக்கு, திறம்பாமை- தப்பி நடவாமையாம்.

சு-ம்-அதி-வாழ்க்கைத்துணைநலம்-ச-ம்- செய்யுள்

பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந் *
திண்மையுண் டாகப் பெறின் *

ஒருவன் அறம்பொரு ளின்பமென்னு மூன்றையுமடையாரு நீதுதற்குக் கற்புடையமனையா ளேதுவாகலா லவனுக்கிவளின் மேற்பட்ட பொருள் வேறொன்றில்லை யென்பதாம்.

௰௫- காவல்தானே பாவையர்க்கழகு.

காவல்தானே-கற்புக்கழிவுவராமற காவலோடு கூடியிருக்கிறதுதானே, பாவையர்க்கு- பாவைபோலு முருவுடையபெண்டுகளுக்கு,அழகு- அழகாரும்.

சு-ம்-அதி-வாழ்க்கைத்துணைநலம்- எ-ம்-செய்யுள்

சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர் *
நிறைகாக்குங் காப்பே தலை *

ரூ௬ கொன்றைவேந்தன்.

மாதர்களுக்கு கற்பின்வழி நிறுத்தப்படு மனக்காவலில்லாதவிடத்து மதிற்காவல் முதலிய காவல்கள் சிறிதும் பயன் படாவென்பதாம

௰௬-கிட்டாதாயின் வெட்டெனமற.

கிட்டாதாயின் - இச்சித்த ஒருபொருள் கிடைப்பதரிதாக விருந்தால், வெட்டென - சீக்கிரத்திலேதானே, மற அப்பொருளைமறந்துவிடு,

ருஎ-ம-அதி- அவாவறுத்தல் -௰-ம்-செய்யுள்

ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே *
பேரா வியற்கை தரும் *

ஒருபோதும் திரும்பாத இயல்பையுடைய அவாவை ஒருவன் விடுவானாயின் அவ் விடுகை அவனுக்கு அப்போதே யெப்போதும் ஒரு நிலைமையனாந் தன்மையை கொடுக்கு மென்பதாம்

ஙஎ-கீழோராயினுந் தாழவுரை,

கீழோராயினும்- கேட்பவர் உனக்குக் கீழ்ப்பட்டவராகவிருந்தாலும், தாழ-உன்சொல வணக்கமுடையதாகவிருக்க, உரை-அவருடன்பேசு,

ரு௩-ம்-அதி-அடக்கமுடைமை-ரு-ம்-செய்யுள்

எல்லார்க்கு நன்றாம் பணித லவருள்ளுஞ் *
செல்வர்க்கே செல்வந் தகைத்து *

அடக்கமான தெல்லார்க்கு மொப்ப நன்றாயினுஞ் செல்வமுடை யாரக்கே வேறொரு செல்வமாகத் தோன்று மென்பதாம்,

ஙஅ-குற்றம்பார்க்கிற் சுற்றமில்லை

குற்றம்-குற்றங்களை, பார்க்கின்-சோதித்துப்பார்த்தால்,

சுற்றம் உறவானவர், இல்லை-ஒருவருமில்லை

ருங-ம் அதி-கண்ணோட்டம்-அ-ம் செய்யுள்.

கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க் *
குரிமை யுடைத்திவ் வுலகு *

முறைசெய்தலாகிய தந்தொழிலழியாமல் தாக்ஷிண்யஞ்செய்யு மரச ரிவ்வுலகத்தை நெடுநா ளாள்வரென்பதாம்.

ஙக- கூரம்பாயினும் வீரியம்பேசேல்.

கூரம்பாயினும்-உன கையிலிருக்கிறது கூர்மையொருதீ

றிய அம்பாகவிருந்தாலும், வீரியம்-வீரத்தன்மையை, பேசேல்- வீணாகப்பேசாதே

யசு-ம்-அதி- அடக்கமுடைமை-ய-ம்- செய்யுள்.

கதங்காத்துக் கற்றடங்க லாற்றுவான் செவ்வி . . *
யறமபார்க்கு மாற்றி னுழைந்து. . . . . . . *

மனத்திற் கோபந்தோன்றுமற் காத்துக் கல்வி யுடையவனா யடங்கி நடப்பவனைத் தருமந் தானே சென்றடையு மென்பதாம்.

உய-கெடுவதுசெய்யின் விடுவதுகருமம்

கெடுவது-கெடுவதை, செய்யின்-தன்சினேகன் செய்தால், விடுவது-அவன்சினேகத்தைவிடுவதே, கருமம்-விவேகிக்கு நற்செய்கை யென்பதாம்.

அஉ-ம்-அதி-நிரட்பு-அ-ம் செய்யுள்.

தொல்லைங்கரும முடற்று பவர்கேண்மை . . . . . *
சொல்லாடார் சோர விடல் . . . . . *

தம்மாலே முடியுந்தொழிலை முடியா தாகச் செய்பவர் நட்பை அவர்களுக்கு தெரியாமற் சோரவிடுக வென்பதாம்.

உக-கேட்டிலுறுதி கூட்டுமுடைமை.

கேட்டில்-கைப்பொருளிழந்தபோதில், உறுதி- மனந்தளராமை, உடைமை- முன்போல அப்பொரு ளுடையனாந் தன்மையை, கூட்டும்-சேர்க்கும்.

கூய-ம்-அதி-ஊக்கமுடைமை-ா-ம்-செய்யுள்.

ஆக்க மிழந்தோமென் றல்லாவா ரூக்க . . *
மொருவந்தங் கைத்துடை யார் . . . . . . . *

நிலைபெற்ற வுள்ளக்கிளர்ச்சியைக் கைப்பொருளாக வுடைய வர் செல்வத்தை இழக்கினுந் தாங்ப மடையா ரென்பதாம்.

உஉ-கைப்பொருடன்னின் மெய்ப்பொருள்கல்வி.

கைப்பொருடன்னின்- கையிலிருக்கிற பொருளைப்பார்க்கினும், மெய்ப்பொருள்-மெய்ப்பொருளாவது-கல்வி- கற்ற வித்தையேயாம்.

சம-ம்-அதி-கல்வி-ம-ம்-செய்யுள்.

கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவர்க்கு ..... *
மாடல்ல மற்றை யவை ... .. ..... ... *

கூஅ கொன்றைவேந்தன்.

ஒருவனுக்கு அழிவில்லாத செல்வ மாவது வித்தை யாகும், அதுநீங்கலாகிய மணியும் பொன்னுமுதலான செல்வம் செல்வமல்ல வென்பதாம்.

உ௩-கொற்றவனறிதல் உற்றிடத்துதவி

கொற்றவன்-அரசனானவன், அறிதல்- ஒருவனைஅறிந்திருக்கிறது, உற்றிடத்து-அவனுக்கு ஆபத்து வந்தவிடத்து, உதவி- உதவியாகும்

சஅ-ம்-அதி-வலியறிதல்-உ-ம்- செய்யுள்.

ஒல்வ தறிவ தறிந்ததன்கட் டங்கிச் .. ... *
செல்வார்கட்குச் செல்லாத தில் *

செய்யக்கூடுந் தொழிலையு மறியவேண்டும் வலிமையு மறிந்து செய்யு மரசர்க்கு முடியாதபொருளில்லை யென்பதாம்.

உச-கோட்செவிக்குறளை காற்றுடனெருப்பு

கோட்செவி-கோள்கேட்குங் குணத்தோன்காதில்,குறளை பிறர்மேலொருவன்வந்துசொன்ன-கோள்,காற்றுடன்- காற்று

டன்சேர்ந்த, நெருப்பு- நெருப்பைப்போலமூளும்.

யகூ-ம் அதி-புறங்கூறாமை-ஙு-ம்-செய்யுள்.

புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாத *
லறங்கூறு மாக்கந் தரும் * . . . . *

ஒருவன் பிறனைக் காணாதவிடத் திகழ்ந்துங் கண்டவிடத்துப் புகழ்ந்து முயிர்வாழ்வதைப்பார்க்கிலும், அது செய்யா திறந்துவிடுவானாயின் அகுறற மொழிதலா லவன் மறுபிறப்பிற் புறங்கூறுதவர் பெறும் பலனைப் பெறுவனென்பதாம்

உடு-கௌவைசொல்லி னெவ்வருக்கும்பகை

கௌவை - பிறர்மேலே பழிச்சொல்லுகளை, சொல்லின்- ஒருவன்சொல்லினால், எவ்வருக்கும் எல்லாருக்கும், பகை அவன் பகையாவான்

சச-ம்-அதி-குற்றங்கடிதல்-ஙு-ம்-செய்யுள்

குற்றமே காகக பொருளாகக் குற்றமே . *
யற்றந் தரூஉம் பகை . . . . . *

தனககு முடிவைத்தரூஉம் பகை குற்றமேயாம்—ஆதலால் அகுற்றம் தன்னிடத்துவராமையே பயனாகக்கொண்டு காக்க வேண்டு மென்பதாம்.

## கொன்றைவேந்தல். கூக

உகூ-சந்ததிக்கழகு வந்திசெய்யாமை.

சந்ததிக்கு-தன் வம்சம்பெருகுதற்கு,அழகு-அழகாவது, வந்தி-மலடியாக,செய்யாமை செய்யாமல் தன்மனையாளோடு கூடிவாழ்தலாம்.

எ-ம்-அதி-புதல்வரைப்பெறுதல்-க ம்-செய்யுள்.

பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த *
மக்கடபே றல்ல பிற *

ஒருவன் பெறும்பேறுகளுள் அறியவேண்டியவை யறிதற்குரிய புத்திரரைப் பெறுதலல்லது பிறபேறுகளை யாமறிவ தில்லை யென்பதாம்.

உஎ-சான்றோனாக்கை யீன்றோட்கழகு

சான்றோனாக்கை-தன்புத்திரனைக் கல்வியறிவால்,நிறைந்தோனென்று - கற்றவர்சொல்லுகிறது, ஈன்றோட்கு - பெற்றவளுக்கு, அழகு-அழகாகும்.

எ-ம்-அதி-புதல்வரைப்பெறுதல்-கூ-ம்-செய்யுள்

ஈன்றபொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச் *
சான்றோ னெனக்கேட்ட தாய் . . *

தன்மகனைக் கல்விகேள்விகளானிறைந்தானென் றறிவுடையவர் சொல்லக்கேட்ட தாய்க்கு,பெற்றபொழுதுண்டாகிய மகிழ்ச்சியினு மதிக மகிழ்ச்சி யுண்டா மென்பதாம்.

உஅ-சிவத்தைப்பேணிற் றவத்திறகழகு

சிவத்தை எண்ணியபயனைத்தரும் பரமசிவத்தை, பேணின்-குறித்துத் தவஞ்செய்தால்,தவத்திற்கு-செய்யும் அத்தவத்திற்கு, அழகு அழகாகும்.

உ எ ம்-அதி-தவம்-கூ-ம்-செய்யுள்.

கூற்றங் குதித்தலுங் கைகூடு நோற்றலி *
னாற்ற றலைப்பட்ட வர்க்கு *

தவஞ்செய்து சாபானுக்கிரக வல்லமைபெற்றவர் தம்மைக் கொல்லவருங் கூற்றுவனையும் வெல்வரென்பதாம்.

உகூ-சீரைத்தேடி-னேரைத்தேடு

சீரை-சௌக்கியத்தை-தேடின் உனக்குத்தேடுவாயானால், ஏரை-பயிரிடுந்தொழிலை, தேடு-தேடிக்கொள்ளு

௱சு-ம்-அதி-உழவு-கூ-ம்-செய்யுள்

சுழன்றுமேர்ப் பின்ன துலக மதனா . . . *
லுழந்து முழவே தலை..... ......... ....... *

பிறதொழில்களாற் பொருள்கிடைத்தபோது முன்னின் பொருட்டுப் பயிர்செய்வோரிடத்தது செலலவேண்டுதலால் வருத்தமுள்ள தொழிலாயினு முழவுத் தொழிலே தலையாகு மென்பதாம்.

௬௰-சுற்றத்திற்கழகு சூழவிருத்தல்.

சுற்றத்திறகு-உறவின்முறையாருக்கு, அழகு-அழகாவது, சூழ-சுபாசுபங்களிலே பலரும் வந்து சூழ, இருத்தல் சமீபங் களிலே குடியிருக்கையாம்

௫௩-ம்-அதி-சுற்றந்தழால்-௪-ம்-செய்யுள்

சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல் செல்வந்தான் *
பெற்றத்தாற் பெற்ற பயன் *

ஒருவன் செலவம்பெறறதற்குப்பயன் தன்னைவிட்டு நீங்கா திருக்கும்படிச் சுற்றத்தாரைத் தழுவுதலாகு மென்பதாம்

௬௧ சூதும்வாதும் வேதனைசெய்யும்

சூதும்-சூதமாடுதலும், வாதும் - தர்க்கம்பேசுதலும், வே தனை - பகையாகவரும் வருத்தத்தை, செய்யும் - அவைகளிலே பழகுகிறவருககு உண்டாக்கும்

௯௪-ம் அதி-சூது-௪-ம் செய்யுள்.

சிறுமை பலசெய்து சீரழிக்குஞ் சூதின் . . *
வறுமை தருவதொன் றில் . .. . *

தன்னை விரும்பினோர்க்குப் பலதுன்பங்களையுஞ் செய்து, புகழையழிக்குஞ் சூதாட்டம்போல ஒருவனுககு வறுமையை தருவ தொன்றில்லை யென்பதாம்

௬௨-செய்தவமறந்தாற் கைதவமாளும்.

செய்தவம்- செய்யுந்தவத்தை, மறந்தால் - ஒருவன்மறந்

தால், கைதவம்-வஞ்சனையாகிய மாயையயான அஆரும்-அவனை அடிமைகொண்டானும்

உஎ-ம்-அதி-தவம்-க-ம்-செய்யுள்.

தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார் மற் றல்லா *
ரவஞ்செய்வா ராசையுட் பட்டு . . . . . *

தவத்தினலே ஞானம்பிறந்து முத்தியடைதலினலே தவஞ் செய்வாரே தங்காரியஞ் செய்பவ ராவரென்றுஞ், சிற்றின்பத்தை விரும்பி பாவஞ்செய்து கெடுதலினுலே பொருளின்பங்களைத் தேடுகின்றவரை யவஞ்செய்வாரென்றுஞ்சொல்லியதாம்.

கொன்றைவேந்தன். சஎ

கஈ-சேமம்புகினுஞ் சாமத் துறங்கு

சேமம்-காவலிலே, புகினும்போய்- ஒருவேலையு மில்லா திருந்தாலும், சாமத்துயினந்தோறும்-பாதிராததிரியாமபின், உறங்கு-நித்திரை பண்ணு

சுக-ம்-அதி மடியின்மை- ச-ம் செய்யுள்

குடிமடிந்து குற்றம் பெருகு மடிமடித்து *
மாணட வுஞற்றி லவர்கு *

முயற்சியில்லாதவர்க்குக் குடியுங்கெட்டுகுற்றங்களும்பெருகும என்பதாம்

ஈச-சையொத்திருந்தா லையமிட்டுண்

சையொத்திருந்தால் - கைப்பொருளொத்திருந்தால்,ஐய மிட்டு பிச்சையிட்டு, உண்-நீயு முண்ணு.

உஈ-ம்-அதி-ஈகை-அ-ம்-செய்யுள்

ஈத்துவககு மின்ப மறியார்கொ லுமுடைமை *
வைத்திழககும் வன்க ணவர் *

ஈகையினாலே தரித்திரரை மகிழ்வித்து அவர் மகிழ்ச்சியைக் கண்டருளுடையா ரடையு மின்பத்தைப் பொருளை வைத்திழ ப்பவ ரறிவாராயிற் றாமு மவ்வின்பத்தையடைவரல்லது வைத் திழவா ரென்பதாம்

௩௫-சொககரென்பவ ரத்தம்பெறுவர்

சொககரென்பவர்- பொன்னுடையவரென்று சொல்லப் படுவோர், அத்தம்- அறமு மின்பமுமாகிய மற்றைப் புருஷா ர்த்தங்களையும், பெறுவா-பெறுவார்.

எழசு-ம்-அதி பொருள்செயல்வகை-௪-ம்-செய்யுள்

அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து . . . ❋
தீதின்றி வந்த பொருள் . . . . ❋

நல்வழியில் வந்தபொரு ளறமு மின்பமுந் தருதலா லவ்வ ழியி ற சம்பாதிககவேண்டு மென்பதாம்

௩௬ சோம்பரென்பவர் தேம்பித்திரிவர்

சோம்பரென்பவர்-சோம்ப லுடையவ ரென்று சொல்ல ப்படுவோர், தேம்பி-வறுமையினால் வருந்தி, திரிவர்-பிறரிடத் திறபோய் இரந்து திரிவார்.

௪

௩௨ கொன்றைவேந்தன்.

௬௨ ம் அதி-ஆள்வினையுடைமை எ ம்-செய்யுள்.

மடியுளாண் மாமுகடி யென்ப மடியிலான் ❋
றாளுளா டாமரையி னாள் ❋

சோம்பலின் மூதேவியும், முயற்சியிற சீதேவியு மிருப்ப ராதலாற சோம்பலைவிட்டு முயறசிசெய்க வென்பதாம்

௩௭-தந்தைசொன்மிகக மந்திரமில்லை

தந்தை-தகப்பனுடைய, சொல்-சொல்லுக்கு, மிகக-மே

ற்பட்ட, மந்திரம்-பலனைத்தரு மந்திரமானது, இல்லை - ஒருவ னுக்கு எந்தநூலினு மில்லை

கய-ம் அதி பெரியாரைப்பிழையாமை உ-ம்-செய்யுள்

பெரியாரைப் பேணு தொழுகிற் பெரியாரற் *
பேரா விழுமமைத் தரும் *

பெரியோரை யவமதித்து நடந்தா லந்நடக்கை தீங்கைத் தருமென்பதாம

௬அ-தாய்சொற்றுறந்தால் வாசகமில்லை

தாய் - தாயினுடைய, சொல்-சொல்லை, துறந்தால் - ஒருவன் தள்ளிவிட்டால், வாசகம்-அதற்கு மேற்பட்ட வேதவாக்கியம், இல்லை-அவனுக்கில்லை

கய ம-அதி-பெரியாரைப்பிழையாமை-௯-ம்-செய்யுள்.

எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார் *
பெரியார்ப் பிழைத்தொழுகு வார் *

தீயினாற் சுடப்படினு மொருவழியிற் பிழைப்புண்டாம். பெரியோர்க்குப் பிழைசெய்து நடப்பவர் பிழையார் என் பதாம

௬௯-திரைகடலோடியுந் திரவியந்தேடு

திரைகடல்-அலைகளையுடைய கடலிலே, ஓடியும்-கப்பலேறித் தூரதேசங்களிற்போயானாலும், திரவியம் - திரவியத்தை, தேடு சமபாதி

எ௬-ம்-அதி-பொருள்செயல்வகை-௬-ம் செய்யுள்

செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கு *
மெஃகதனிற் கூரிய தில். *

திரவியத்தைச் சம்பாதிக்கக்கடவர் அத்திரவியம் பகைவர் செருக்கைக் கெடுக்கு மாயுதமாம். அதுபோலக்கூரிய ஆயுதம் வேறில்லை என்பதாம்.

சஎ-கிராக்கோபம் போராமுடியும்.

கிராககோபம் - எப்போது மொருவனிடத்து நீங்காத கோபமானது, போராமுடியும் பின் சண்டையாகமுடியும்

சகஎ-ம்-அதி வெகுளாமை கஎ-ம் செய்யுள்

சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி யினமென்னு
மேமப் புணையைச் சுடும் .. . . ௯

கோபமாகிய நெருப்புத் தனக்கிடமானவரையேயன்றி யவர்க் கிதோபதேசஞ்செய்து, பிறவிக்கடலைக்கடப்பிக்கும் தெப்பம்போலவாரையுஞ் சுடுமென்பதாம்

சஅ-குடியாப்பெண்டீர் மடியினெருப்பு

குடியா - தங்கணவருக்குத் துன்பம்வந்தபோது மனம் பதையாத, பெண்டீர் - பெண்டுகள், மடியில-அவர்வயிற்றில் நெருப்பு கட்டு வருத்துவதாகிய நெருப்பிருக்கிறதற்கொப பாவர்

கஎ-ம்-அதி-வாழ்க்கைத்துணைநலம்-உ ம்-செய்யுள்

மனைமாட்சி யில்லாள்க ணில்லாயின் வாழ்க்கை ௫
யெனைமாட்சித் தாயினு மில் . ௪

ஒருவன் மனையாளிடத்து நற்குண நற்செய்கை யில்லா திருந்தா லவன் பெருஞ்செல்வ முடையவனா யிருந்தாலும் மிக வாழ்க்கை நடவாதென்பதாம்

சகூ-தூற்றும்பெண்டீர் கூற்றெனத்தகும்

தூற்றும்- தங்கணவர்மேற் குற்றஞ்சொலவித தூற்றுகிற பெண்டீர் பெண்டுகளே, கூற்றெனத்தகும்-அவருக்கு கெமனென் றெணணத்தகும்

கூ-ம்-அதி-வாழ்க்கைத்துணைநலம் கூ-ம்-செய்யுள்

தறகாத்துத் தறகொண்டாற பேணித் தகைசான்ற ௪
சொற்காததுச் சோர்விலாள் பெண ௬

கற்பினின்றுவழுவாமல் தன்னைகாத்துத் தன்கணவனைக் காப்பாறறி நற்குண நறசெய்கைகளை மறவாதவளே மனையவள் என்பதாம்

௪௩-தெய்வஞ்சிறி கைதவமாளும்

தெய்வம்-தெய்வமானது, சிறில்-ஒருவனைக்கோபிதபாக்,

௪௪ கொன்றைவேந்தன்.

கைதவம்-அவனுக்கு கைகூடியிருந்த தவமும், மாளும்-பயன் கொடாமலழியும

௧-ம-அதி-கடவுள்வாழ்த்து-ம-ம்-செய்யுள்

பிறவிப் பெருங்கட லீந்துவர் நீந்தா . *
ரிறைவனடி சேரா தார் . . . *

கடவுளடியை இடைவிடாது நினைத்தவர் பிறவியை யொழிப்ப ரென்றும், நினையாதவரதனை யொழிக்கமாட்டா ரென்றுங் கூறியதாம்

௪௪-தேடாதழிக்கிற் பாடாமுடியும்.

தேடாது - ஒருவன் வருந்தி சம்பாதியாமல், அழிக்கின்-இருக்கிற பொருளைச் செலவழித்தால், பாடாமுடியும அவனுக்குப் பின் வருத்தமாக முடியும்

௫௭-ம்-அதி-தெரிந்துசெயல்வகை-௪-ம்-செய்யுள்

தெளிவி லதனைத் தொடங்கா ரிளிவென்னு . *
மேதப்பா டஞ்சு பவர் . . *

இகழ்ச்சியை யஞ்சுவோர் துணியப்படாத காரியத்தைச் செய்யத் தொடங்கா ரென்பதாம்.

சஙு-தையுமாசியும் வையகத் துறங்கு

தையும் - தைமாதத்திலும், மாசியும் - மாசிமாதத்திலும், வையகத்து-பனிவருத்தந்தராத-வைககோல்வீட்டிலே,உறங்கு நித்திரை பண்ணு

சகூ-ம்-அதி காலமறிதல் உ-ம்-செய்யுள்

பருவத்தோ டொட்ட வொழுக றிருவினைத் *
தீராமை யார்க்குங் கயறு *

காலம்பார்த்துப் போர்க்குச் செல்லுகின்ற வரச னெக்கா லத்துஞ் செல்வத்துடனே வாழ்வ னென்பதாம்

சசு-தொழுதூண்சுவையி னுழுதூணினிது

தொழுது - ஒருவரிடத்திலேசேவித்து, ஊணசுவையின்- உண்ணுமுணவின் சுவையினும், உழுது - உழுதுபயிர்செய்து, ஊண- உணனுமுணவின்சுவை, இனிது - இன்பந்தருவதாகும்.

௱ச-ம்-அதி-உழவு-௲-ம்-செய்யுள்.

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாந் *
தொழுதுண்டு பின்செல் பவர் *

உழுது பயிர்செய்து அதனாலுண்டு வாழ்கின்றவரே தமக்குரியவரென்றும், தம்மையொத்த மனிதரை வணங்கி, அவர் கொடுக்க வாங்கி யுண்டு வாழ்கின்றவர் தமக்குரிய ரசுலமொன்றுஞ் சொல்லியதாம்

சஎ தோழனோடு மேழைமைபேசேல்

தோழனோடும்- உன் சிநேகிதனோடும், ஏழைமை-உனக்கிருக்கிற சிறுமையை, பேசேல- நீ எப்படிப்பட்ட வேளையிலேயும் பேசாதே.

ாஎ ம்-அதி-இரவச்சம்-ச ம்-செய்யுள்

இடமெல்லாங் கொள்ளாத் தகைத்தே யிடமில்லாக் *
காலு மிரவொல்லாச் சாபு *

தான் வறுமையடைந்தபோதும் பிறரிடத்துச்சென் றிரத்தற்குடன்படாத வமைதியானது உலக மெலலாங் கொளளாத பெருமையுடைத்தாகு மென்பதாம்

சஅ நல்வினைக்கமல்ல கல்லற்படுத்தும்

நல்வினைக்கமல்லது- நல்லசகவாச மல்லாதது, அல்லல்-துன்பத்தை, படுத்தும்- எப்போதும் உண்டாக்கும்

அஉ-ம்-அதி-தீநட்பு கூ ம்- செய்யுள்

கனவினு மின்னாது மன்னோ வினைவேறு *
சொல்வேறு பட்டா ரொடர்பு *

செய்கையிற் பகைவராயுஞ் சொல்லி னட்பினராயு மிருப்பவர் நட்பு கனவினு மாகாதென்பதாம்

சகூ- நாடெங்கும்வாழக கேடொன்றுமில்லை

நாடெங்கும்- தேசமெங்கும்,வாழ செழித்திருக்கு மாயின்,கேடொன்றும்- கெடுதலொன்றும் இல்லை-உணடாகாது.

எசா - ம்-அதி நாடு - கூ-ம்- செய்யுள்

கேடறியா கெட்ட விடத்தும் வளங்குன்று *

நாடென்ப நாட்டிற் றலை *

கேடில்லாததும் வளங்குன்றாததுமான நாடடையெல்லா நாட்டிலும் முதன்மையான நாடென்பர் என்பதாம்

௯௰-நிற்கக்கற்றல்-சொற்றிறம்பாமை

நிற்கக்கற்றல்-தன்னிடத்து நிலைபெறக்கற்றலாவது, சொல்-தான்சொல்லுஞ்சொல்லுகளிலே, திறம்பாமை-ஒருபோதுந் தப்பிப்போகாமையாம்.



## கொன்றைவேந்தன்.

௬௰௫-ம்-அதி-சொல்வன்மை ௰-ம்- செய்யுள்.

இணரூழ்த்து நாறா மலரனையர் கற்ற *
துணர விரித்துரையா தார் *

அழகாக மலர்ந்தும் வாசனையில்லாத மலர்சூடப் படாமை போல நூலைகற்றிருந்தும் பிறரறிய விரித்துச் சொல்ல மாட்டாதவர் நன்குமதிக்கப்படா ரென்பதாம்

௯௧-நீரகம்பொருந்திய ஊரகத்திரு

நீர்-வளமானது, அகம்-தனக்குள்ளே, பொருந்தியமழையில்லாத பஞ்சத்திலும்அமைந்த, ஊரகத்து-ஊரினிடத்திலே இரு-குடியிரு.

௭௪-ம்-அதி-நாடு-௮-ம்- செய்யுள்

பிணியின்மை செல்வம் விளைவின்ப மேம . *
மணியென்ப நாட்டிற்கிவ் வைந்து *

பிணியில்லாமை முதலாகிய வைத்துமுடைமை நாட்டிற்க ழகாகு மென்பதாம்.

௫௨- நயணணியகருமமு மெண்ணித் துணி

நண்ணிய-சிறிய, கருமமும்- தொழில்களையும், எணணி. ஆலோசித்து, துணி-பின்பு அவைகளைச் செய்யத் துணி

௫௭-ம-அதி-தெரிந்துசெயல்வகை-எ-ம்- செய்யுள்

எணணித் துணிக கருமந் துணிந்தபி *

னெண்ணுவோ மென்ப திழுக்கு *

தொடங்கியபி னெண்ணுவது குற்றமாதலா லொருகருமத்தை யெணணித தொடங்கல்வேண்டு மென்பதாம்

௫௩- நூன்முறைதெரிந்து சீலததொழுகு

நூல் மனுநூலிலே சொல்லப்பட்ட, முறை-விதிகளின் முறையை தெரிந்து-அறிந்து, சீலத்து-நல லொழுக்கவழியில் ஒழுகு நட

௰௪-ம்-அதி-ஒழுக்கமுடைமை-உ-ம்-செய்யுள்.

பரிந்தோம்பிக் காக்க வொழுக்கந் தெரிந்தோம்பித்*

தேரினு மஃதே துணை . . . *

பலதருமங்களையு மாராயுமிடத் திம்மை மறுமை இரண்டிற் குமுயிர்கருதுணையாவ தொழுக்கமே யாதலா லதனை யொருவன் வருந்தியுஞ் சோரவிடாமற் காககவேண்டுமென்பதாம்.

## கொன்றைவேந்தன்.

௧-நெஞ்சையொளித்தொரு வஞ்சகமில்லை.

நெஞ்சை-தன்மனதை, ஒளித்து - அறியாமலுணடாகிற, ஒருவஞ்சகம்- யாதொருவஞ்சனையும, இல்லை யாவரிடத்திலுமில்லை

உ-அ ம் அதி-கூடாவொழுககம்-க-ம் செய்யுள்

வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்க *
ளைந்து மகத்தே நகும் *

வஞ்சம் பொருந்திய மனத்தை யுடையவனது மறைந்த வொழுக்கத்தை உடம்பாய் அவனோடு கலந்து நிற்கும் பஞ்ச பூதங்களுங் கண்டு தம்முள்ளே சிரிக்கு மென்பதாம்

ருஉ-நோரநோன்பு-சீராகாது

நோரா-ஒருவர் வருத்த பிறகு உடன்படாமற செய்கிற, நோன்பு விரதமானது, சீராகாது சீராகமுடியாது

உஎ-ம்-அதி-தவம் எ-ம்-செய்யுள்

சுடச்சுடரும் பொன்போ லொளிவிடுந் துன்பஞ் *
சுடச்சுட நோக்கிற் பவர்க்கு . *

நெருப்பிற்புடம்போடப்பட்டு வெந்தபொன்னுயர்ந்து மாற் றுயர்வதுபோலத் துன்பத்தில் வருந்தித் தவஞ்செய்தவருக்கு

ஞானமிகுமென்பதாம்

ருக-நைபவரொனினு நொய்ய வுரையேல

நைபவரொணினும்-கேடபோா எதிர்பேசாமல்- வருந்த வோராறுலும், நொய்ய - அறபமாகிய சொல்லுகளை, உரை யேல்-சொல்லாதே

கமஅ-ம்-அதி-பெருமை-சு ம்-செய்யுள்

பெருமை பெருமித மின்மை சிறுமை . . *
பெருமித மூர்ந்து விடல் *

பெருமைக்குக் காரணமுண்டாகிய விடத்துஞ் செருக்கில் லாமையுஞ், சிறுமைக்குக் காரண மில்லாத விடத்துஞ் செருக் கடைதலுங், குணமாகு மென்பதாம்

ருஎ- நோய்யவொன்பவர் வெய்யவராவர்.

நொய்யவொன்பவர் உருவத்தாற் சிறியவொன்றிகழப்பட்டவரும், வெய்யவராவர்-செய்காரியத்தால் யாவரும் விருப்புங் குணத்தினராவர்.

ருஎ **கொன்றைவேந்தன்**

கூஎ ம்-அதி-வினைத்திட்பம்-எ ம்-செய்யுள்

உருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க்
கச்சாணி யன்னா ருடைத்து *

அச்சாணி, வடிவாற் சிறிதாயிருந்தே பெரிய பாரத்தைக் கொண்டு செலுத்தும் வலிமையுடைத்தாம் அதுபோல வடிவாற் சிறியராயிருந்தே பெரியதொழில்களை முடிக்கு மனவலிமை யுடையவாக ளுமுண்டு, அவ்வலிமையை நோக்கியறிகவென்பதாம

நஅ நோன்பென்பது கொன்றுதின்னாமை

நோன்பென்பது- தவமென்று சொல்லப்படுவது, கொ[illegible] சீவனவதைசெய்து அதன் மாமிசத்தை [illegible]

[illegible] அதி புலான்மறுத்தல்-கூ-ம்-செய்யுள்

[illegible]ரரிந் தாயிரம் வேட்டலி னொன்றி *
ருயிர் செகுத் துண்ணாமை நன்று *

ஆயிரம் யாகஞ் செய்து பெறும் பலனினு மோ ருயிரைக் கொன்றதன் மாமிசத்தை தின்னாதிருத்தலாற் பெறும்பயன் [illegible]கமாகு மென்பதாம்

ப[illegible]ணியப்பயிரிற புண்ணியத்தெரியும்

ப[illegible] ஒருவன் செய்த, பயிரின் - பயிரின்விளைவுனாலும் விளைவில்லாமையாலும்,புண்ணியம்-அவனிடத்துப்புண்ணிய

பிருக்கிறதும் இல்லாமையும், தெரியும்-அறியப்படும்

சசு ம்-அதி- வினைத்தூய்மை-க-ம்- செய்யுள்.

துணைநல மாக்கந் தருஉம் வினைநலம் . . . . . *
வேண்டிய வெல்லாந் தரும் . . . . . . . *

நல்ல துணையானது பொருளொன்றையே தருதலாலும், நல்ல தொழிலானது அறம் பொருளின்பங்களைத் தருதலாலுங் காட்சிப்பொருளாகிய துணையிலும் கருத்துப் பொருளாகிய தொழிலே சிறந்ததென்பதாம்

சுய-பாலோடாயினுங் காலமறிந்துண்.

பாலோடாயினும் - பாலோடுகூடிய சாதத்தை யுண்டாலும், காலமறிந்து-உண்ணத்தகுங்காலத்தையறிந்து,உண்-அதனை-உண்ணு.



சசு-ம்-அதி-காலமறிதல்-ச-ம்- செய்யுள்

ஞாலங் கருதினுங் கைகூடுங் காலங் . . *
கருதி யிடத்தாற் செயின் *

அரசன் காலமறிந்து தொழில்செய்தால் உலகெல்லாம்ஆள நினைத்தாலுங் கைவசப்படும் என்பதாம்

சுக-பிறன்மனைபுகாமை யறமெனத்தகும்

பிறன்-பிறனுடையமனை - மனையாளிடத்தில், புகாமை-

இச்சித்துப்போகாமையே, அறமெனத்தகும பலதருமங்களிலும உயர்ந்ததருமமென்று சொல்லத்தகும.

ம௫-ம் அதி பிறனில்விழையாமை-அ-ம்-செய்யுள்

பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு *
அறனொன்றோ வான்ற வொழுக்கு *

பிறனது மனையாளை இச்சியாமையே பெரியோர்க்குத் தரு மம்நிறைந்தஒழுக்கமுமாம்

சுஉ-பீரம்பேணி பாரந்தாங்கும்

பீரம்பேணி-முலைப்பால் குறைவறவுண்டு வளர்ந்தவள், பாரம்-பாரமானசுமையை, தாங்கும்-சுமப்பாள்

எஎ-ம் அதி படைமாட்சி-உ-ம-செய்யுள்

உலைவிடத் தூறஞ்சா வன்கண டொலைவிடத்துத் *
தொல்படைக் கல்லா லரிது *

அஞ்சாதுநின்று தாங்குஞ் செளரியமானது (முன்னே நன்றாகப் பழகித்தேர்ந்த) அரசனது பழயசேனைக் கல்லாது மற்றவர்க்கில்லை யென்பதாம்

சுஈ-புலையுங்கொலையுங் களவுந்தவிர்

புலையும்-அசுத்தமாகிய மாமிசந் தின்னுதலையும், கொலையும்-சீவவதைசெய்தலையும், களவும் - பிறர்பொருளைத் திருடுதலையும், தவிர்-நீ செய்யாதிரு

உசு-ம்-அதி-புலான்மறுத்தல்

அருளல்ல தியாதெனிற கொல்லாமை கோறல் *
பொருளல்ல தவ்வூன் றினல் *

அருள் யாதெனில்-கொல்லாமை,(அவ்வருள்) அல்லாததியா தெனில் - கொல்லுதல், அறமென்னும் பொருளலலாததியா தெனில், அவ்வூனைத் தின்னுதலாகிய பாவமேயாம்

அன்றியும், ௨கூ-ம்-அதி-கள்ளாமை-௨-ம் செய்யுள்
உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக் *
கள்ளத்தாற் கள்வே மெனல் *
பிறன்பொருளை யவனறியாமல் வஞ்சித்துக் கொள்வோ மென்று நெஞ்சி னினைத்தாலும் பாவமேயாகும்
௩௪-பூரியோர்க்கில்லை சீரியவொழுக்கம்
பூரியோர்க்கு-கீழ்மக்களுக்கு, சீரிய-சிறப்பாகிய, ஒழுக்கம் நடக்கையானது, இல்லை உண்டாதலில்லை
௱அ-ம்-அதி-கயமை ௫-ம்-செய்யுள்
அச்சமே கீழ்கள தாசார மெச்ச *
மவாவுண்டே லுண்டாஞ் சிறிது *
கீழோரிடத்து நல்லொழுக்கமானது, பெரும்பான்மை அச்சத்தினாலும், சிறுபான்மை பொருள்கிடைத்தலாலு மல்லது இயல்பாக வுண்டாகா தென்பதாம
௩௫-பெற்றோர்க்கில்லை சுற்றமுஞ்சினமும்
பெற்றோர்க்கு-தத்துவஞானம்பெற்றவர்களுக்கு, சுற்றமும்-உறவினர்மேலாசையும், சினமும்- மற்றவர்மேல் வெறுப்பும், இல்லை-இருப்பதில்லை
௩௪-ம்-அதி துறவு-௫-ம்-செய்யுள்
மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க *
லுற்றார் குடம்பு மிகை *
துறந்தோர்க்கு தமதுடம்பு தவஞ்செய்தற்குக காரணமாயினுந் துன்பமெப்போதும் விளைதலால், அதையும் வேண்டாராயின் வேறே பற்றப்படுவ தொன்றில்லை யென்பதாம்
௩௬-பேதைமையென்பது மாதர்க்கணிகலம்
* பேதைமையென்பது - அறியாமையென்று சொல்லப்படுங் குணமானது, மாதர்க்கு- பெண்களுக்கு, அணிகலம்-

ஆபரணமாகும்.

ாஉ-ம்-அதி-நாணுடைமை கூ-ம் செய்யுள்.

கருமத்தா னாணுத னாணுத் திருநுத . . *
னல்லவர் நாணுப் பிற *

* பெதைமை என்பது, மடவார் தாமறிவுளராயினு நாணு டைமையால் ஆடவர்முன் அகங்கரியாமல் மடமை பூண்பது வேயாம்.

கொன்றைவேந்தன். ருக

நன்மக்களது நாண மிழிந்த கருமத்தால்வருவது. அதுவல் றி மனமொழி மெய்களி னொடுக்கத்தால் வருவன குலமகளிர் நாணங்களாகு மென்பதாம்

கூ-பையச்சென்றால் வையந்தாங்கும்

பைய மெள்ள, சென்றால்-ஒருவன் தகுதியானவழியிலே நடந்தால், வையம் - பூமியிலுள்ளோர், தாங்கும் அவனை மே லாகக் கொள்வார்.

மகூ-ம்-அதி பொறையுடைமை-ச-ம் செய்யுள்

நிறையுடைமை நீங்காமை வேண்டிற் பொறையுடைமை *
போற்றி யொழுகப் படும் *

ஒருவன் பெருந்தன்மை தன்னைவிட்டு நீங்காதிருக்க விரும் புவானாயிற் பொறுமையைத் தன்னிடத் தழியாமற காக்கக் கடவ னென்பதாம்

கூஅ-பொல்லாங்கென்பவை யெல்லாந்தவிர்

பொல்லாங்கென்பவை-தீங்குகளென்று சொல்லப்பட்ட வைகளாகிய, எல்லாம்-எல்லாவற்றையும், தவிர் எப்போதுஞ் செய்யாதிரு

சச ம்-அதி குற்றங்கடிதல்-ச-ம் செய்யுள்

குற்றமே காகக பொருளாகக் குற்றமே *
யற்றந் தருஉம் பகை . . *

குற்றந் தனக கழிவைத்தரும் பகையாதலா லதனை யொழிக்க வேண்டு மென்பதாம்

கஅ போனகமென்பது தானுழந்துண்டல்

போனகமென்பது-சாப்பாடென்று சொல்லப்படுவது, தானுழந்து தான் பிரயாசைப்படடுச் சம்பாதித்துஉணடல-உண்ணுதலாம்.

ஈஎ-ம்-அதி இரவச்சம்-ரு-ம்-செய்யுள்.

தெண்ணீ ரடுபுற்கை யாயினுந் தாடந்த *
துணணவி னூங்கினிய தில் *

முயற்சியால் வந்தது கூழாயினும் அதை யுண்ணுதல்போ லின்பமுடைய தில்லை என்பதாம்.

எஅ-மருந்தேயாயினும் விருந்தோடுண்.

மருந்தேயாயினும் - உண்ணப்படுவது கிடைத்தற்கரிய

ஙஉ கொன்றைவேந்தன

தேவாமி, தமே யாறுவும், விருந்தோடு - வந்த விருந்தாளிக ளோடு கூடி, உண்-நீ யுண்ணு

கஎ-ம்-அதி-விருந்தோம்பல்-உ-ம்-செய்யுள்.

விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா *
மருந்தெனினும் வேணடற்பாற் றன்று *

தேவாமிர்தம் கிடைத்ததாயினும், வந்தவிருந்தினரை புறத் துவைத் துண்ணலாகா தென்பதாம்

எக மாரியல்லது காரியமில்லை.

மாரியல்லது மழையில்லாமல், காரியம்- யாதொரு காரியமும், இல்லை-யாதாகும் நடப்பதில்லை

உ-ம அதி-வான்சிறப்பு-அ-ம்-செய்யுள்

சிறப்பொடு பூசனை செல்லாது வானம் . *
வறக்குமேல் வானோர்க்கு மீண்டு . *

மழைபெய்யாதாகின் தேவர்களுக்கும், இவ்வுலகத்தில் மக்களால் செய்யப்படுகிற திருவிழா, பூசை, முதலிய மற்ற வைத்தககாரியமும் நடவாது

எஉ மின்னுக்கெல்லாம் பின்னுக்குமழை

மின்னுக்கெல்லாம் - வானத்திலே காணப்பட்ட மின்னுக்கெல்லாம், பின்னுக்குமழை அப்போது மழையில்லையாயினும் பின்னே மழையுண்டாகும்.

ய௬-ம்-அதி-பொறையுடைமை-௪-ம்-செய்யுள்

நிறையுடைமை நீங்காமை வேண்டிற் பொறையுடைமை *
போற்றி யொழுகப் படும் . *

ஒருவன - நிறைவை வேண்டுவானாயின் பொறுமையோடு காத்திருக்கக்கடவன்

எ௩-மீகாமனில்லா மரக்கலமோடாது

மீகாமன்-தன்னை யோட்டத்தக்க மாலுமி, இல்லா - இல்லாத, மரக்கலம்- கப்பலானது, ஓடாது - கடலிலே செவ்வையாக ஓடாது

எ௩-ம்-அதி படைமாட்சி ௰-ம் செய்யுள்

நிலைமக்கள் சால வுடைத்தெனினுந் தானை *
தலைமக்க ளில்வழி யில் . . *

போரினிடத்து நிலையையுடைய வீரரை மிகவுடைத்தாயிருந் தனக்குத் தலைவராகிய வீரர் இல்லாவிடத்து சேனை நில்லாது என்பதாம்

௭௪-முற்பகல்செய்யின் பிற்பகல்விளையும்

முற்பகல்- ஒருமுகூர்த்தகாலத்தின் முன்பங்கிலே, செய்யின் பிறனுக்குத் தீங்குசெய்தால், பிற்பகல் அதன்பின்பங்கிலே, விளையும்-செய்தவனுக்கு அத்தீங்குதானே உண்டாகும்.

௩௨-ம்-அதி இன்னாசெய்யாமை-௯-ம்-செய்யுள்.

பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா *
பிற்பகற் றாமே வரும் *

முன்பு ஒருவனுக்குத் தீமைசெய்தால் பின்பு அத்தீமை தனக்கேவரும் என்பதாம்

௭௫-மூத்தோர்சொல் வார்த்தையமிர்தம்

மூத்தோர்-பெரியோரானவர், சொல்-சொல்லுகிற, வார்த்தை வசனமானது, அமிர்தம் - தேவாமிர்தம்போலச் சிறப்புள்ளதாகக் கொள்ளப்படும்

௪௨-ம் அதி-கேள்வி ௫-ம்-செய்யுள்

இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே . *
ஒழுக்க முடையார்வாய்ச் சொல் . *

நல்லவர்கள் வாயிற் பிறக்குஞ்சொல் ஒருவர்க் காபத்துவந்தவிடத்தில் சேற்றுநிலத்தில் ஊன்றுகோலைப்போ லுதவியாமென்பதாம்

௭௬-மெத்தெனப்படுத்த னித்திரைக்கழகு

மெத்தென-மெத்தெனவிருக்க, படுத்தல-பஞ்சணையிலே படுத்தல, நித்திரைகரு ஒருவன்செய்கிற நித்திரைக்கு, அழகு-அழகாகும்

வாதபித்தப்பிணிகள் அணுகாமையைச் செய்தலானும், நன்மை யளவை மிகவினோதலானுந் துயிலுதற்குரிய தேயமெலக் கூறியதே யிதன்கருத்தும்

௫௰-ம் அதி இடனறிதல்-௩ ம் செய்யுள்.

ஆற்றாரு மாற்றி யடுப விடனறிந்து ... *
போற்றார்கட் போற்றிச் செயின் ... *

௫௪ கொன்றைவேந்தன்.

ஆற்றாரும்-வலிமையில்லாதவரும், ஆற்றி-வலிமையுடையவராய் அடுபவெல்வார், இடன் - (அதற்கேற்ற)இடத்தை, அறிந்து-தெரிந்து, போற்றி தம்மைக்காத்துககொண்டு, போற்றார்கண்-தம்மைநொய்யச்செய்யும் விரோதியினிடத்து, செயின் தக்கதொழிலைச் செய்வாராயின் என்பதனாற்காண்க

என மேழிச்செல்வங் கோழைபடாது

மேழி-மேழிபிடித்து எருழுது பயிர்செய்தலாலுண்டாகிற, செல்வம்-செல்வமானது, கோழைபடாது- எப்போதுங் குறைவையடையாது

௱௪-ம் அதி உழவு-௩-ம் செய்யுள்

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந் *
தொழுதுண்டு பின்செல்பவர் *

உழுதலைச்செய்து உண்டு வாழ்கின்றவரோ மேன்மையோடு வாழ்கின்றவர் மற்றவரெல்லாம் பிறரைத்தொழுது அவரைப் பின்செல்லுகின்றவராம்

எஅ-மைவிழியாடனைக் கையகன்றொழுகு

மைவிழியாடனை-பிறரை மயக்குதற்காக மையிடுங் கண்களையுடைய பரத்தையை, கையகன்று-தூரமாகநீங்கி,ஒழுகு-நீ நல்லவழியிலே நட

கஉ ம்-அதி-வரைவின்மகளிர்-உ-ம்-செய்யுள்

பயன்றூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர *
நயன்றூக்கி நள்ளா விடல் *

பொருட்பயனைக்குறித்து நயம்பேசும் வேசையர் நடக்கை யறிந்து அவரை விடக்கடவர் என்பதாம்

எகூ-மொழிவது மறுக்கி னழிவது கருமம்

மொழிவது - கற்றோர் சொல்லுகிற உபாயத்தை, மறுக்கின்-கேளாமற்செய்தால், கருமம் ஒருவன் செய்யுந்தொழில், அழிவது கெடுவதாகும்

கூடு-ம்-அதி-சொல்வன்மை-உ-ம்-செய்யுள்.

ஆக்கமுங் கேடு மதனால் வருதலாற் *
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு *

செல்வமுங் கேடும் சொல்லால் வருதலால்,மந்திரிகள் சொற்சோர்வு வராமற் காக்கக்கடவர் என்பதாம்.

கொன்றைவேந்தன். ஞூ

அ௦-மோனமென்பது ஞானவரம்பு.

மோனமென்பது - மௌனநிலையென்பது, ஞான - தத்

துவஞானத்தின், வரம்ப-எல்லையாகும்

௩௯-ம்-அதி மெய்யுணர்தல்-௯ம் செய்யுள்

கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர் *
மற்றீண்டு வாரா நெறி ௫

இப்பிறப்பி லுபதேசத்தைக் கேட்ட ண்மைப்பொருளை யறிந்தவர் பிறப்பை நீக்குவா என்பதாம்

அக வளவறியினு மளவறிந்தழித்துண்

வளவறியினும் சம்பத்திலே சோழனுக கொப்பானவ

௯ யிருந்தாயானாலும், அளவு பொருள் வரவினளவை, ,திட் டு-தெரிந்து, அழிக்கு-செலவழித்து, உண்டு அநுபவி

௪௮ ம்-அதி-வலியறிதல் ௯-ம்-செய்யுள்

அளவறிந்து வாழாதான் வாழ்க்கை யுளபோல ௪
இல்லாகித் தோன்றாக் கெடும் ௭

தனகருள்ள பொருளளவை யறிந்து வாழாதவன் வாழ்க்கை உள்ளவைபோலத் தோன்றி யழியும என்பதாம்

அ௨-வானஞ்சுருங்கிற-றானஞ்சுருங்கும

வானம - மழையானது, சுருங்கில்-பெய்தல குறையுமா யின், தானம் சற்பாத்திரங்களுக்குக் கொடுக்கிற கொடையும், சுருங்கும் குறைவுபடும

௨-ம-அதி-வான்சிறப்பு-௯-ம்-செய்யுள்

தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம் *
வானம் வழங்கா தெனின் *

மழைபொழியாவிடி லுலகத்தில் தருமமுந் தவமு முண் டாகாவாம என்பதாம்

அரு-விருத்திலோர்க்கில்லை பொருந்தியவொழுக்கம்.

விருந்திலோர்க்கு- விருந்தெதிர் கொள்ளாதவருக்கு, பொருந்திய-தாம் பொருந்திய, ஒழுக்கம்- இல்லறம், இல்லை இருந்ததாயினும்-இல்லாததற்குச் சமானமாகும்

கூ-ம்-அதி விருந்தோம்பல்-க ம்-செய்யுள்

இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு . . .. *

சுக வேளாண்மை செய்தல்

இல்வாழ்க்கையில் வாழ்வதெல்லாம் விருந்தினரை உபசரித்து உபகாரஞ் செய்தற்பொருட்டு என்பதாம்

அ[illegible]-வீரல்சேண்மை கூரம்பாகும்

[illegible] வீர[illegible], சேணமை-பிளேக [illegible]மாருவனுக்கு [illegible]ரு[illegible]தால் கூரமடாரும் - அவனுக்கு அதுவே தன்பகை [illegible] வெலலுதறகுக [illegible] ரான அமபாகும்

எர ம் அதி நட்பு-க ம் செய்யுள்

செயற்கரிய யாவுள நட்பி னதுபோல் *
வினைக்கரிய யாவுள காப்பு

நட்புபோல் சம்பாதித்துக கொள்ளுதற்கு அரிய[illegible] கள் எவைகள் இருக்கின்றன சமபாறிதது[illegible]கொண்டா[illegible] போல் பகைவர்செய்யுந் தொழிலுக்கு அரியகாவல[illegible] எவைகள் இருககின்றன என்பதாம்

அடு உரவோரொன்கை யிரவாதிருத்தல்

உரவோரொன்கை- வல்லவரென்று சொல்லப்படுதல், இரவாது தனக்குச் சிறுமைவந்தகாலத்திலும் பிறரை யிரவாமல், இருத்தல்-இருகையாம்

[illegible]எ-ம்-அதி-இரவச்சம்-க-ம்-செய்யுள்

காவாது வப்தியும் கண்ணல்லார் கணூ *
பிரவாமை கோடி யுறும் *

ஒளியாது கொடுக்குங் கண்ணிற கொப்பானவரிடத்தும், யாகியாதிருத்தல் கோடி மடங்கு நன்மையாம் என்பதாம

அசு-ஊக்கமுடைமை யாக்கத்திற்கழகு

ஊக்கம்-செய்தொழிலிலே மனந் தளராமையை, உடைமை ஒருவன் உடையனாதல், ஆக்கத்திற்கு அவன் செல்வத்திற்கு, அழகு-அழகாகும்

சுய-ம்-அதி-ஊக்கமுடைமை-ச-ம்-செய்யுள்

ஆக்க மதர்விஞப்ச் செல்லு மசைவிலா *
வூக்க முடையா னுழை *

அசைவில்லாத மனவெழுச்சி யுடையவனிடத்தே பொருளானது வழிகேட்டுக் கொண்டுபோகும் என்பதாம்

அள-வெள்ளைக்கில்லை கள்ளச்சிந்தை.

வெள்ளைக்கு - களங்கமில்லாத பரிசுத்த குணமுடையவ

கொன்றைவேந்தன். ருள

னிடத்து, கள்ளம் வஞ்சனைபொருந்திய, சிந்தை-நினைப்பானது, இல்லை-இராது.

ஈய-ம்-அதி-வாய்மை-அ-ம்-செய்யுள்

புறந்தூய்மை நீரா னமையு மகந்தூய்மை *
வாய்மையாற காணப் படும் *

ஒருவனுக்கு உடம்பு பரிசுத்தமாந்தன்மை நீரினாலே உண்டாகும், அதுபோல் மனது பரிசுத்தமாந்தன்மை உண்மையால் உண்டாகும்.

அஅ-வேந்தன்சீறி னாந்துணையில்லை

வேந்தன்- அரசனானவன், சீறின்-ஒருவன்மேற் கோபஞ் செய்தால், ஆம்- அப்போதைக்கு உபயோகமாகின்ற, துணை-சகாயம், இல்லை-அவனுக்கு இல்லை

கஉ-ம்-அதி-பெரியாரைப்பிழையாமை-ரு-ம்-செய்யுள்

யாண்டுசசென் றியாண்டு முளராகார் வெந்துப்பின் *
வேந்து செறப் பட்டவர் *

வல்ல வரசனாற் கோபிக்கப்பட்ட வரசர் எவ்விடத்துச் சென்று முயிர்வாழார் என்பதாம்

அக வையந்தோறுந் தெய்வந்தொழு

வையந்தோறும்- பூமியிலுள்ள ஸ்தலந்தோறும்போய், தெய்வம்-கடவுளை, தொழு நீதரிசித்துவணங்கு.

முதல்-ம்-அதி-கடவுள்வாழ்த்து-ச ம்- செய்யுள்

வேண்டுதல் வேணடாமை யிலானடி சேர்த்தார்க !
கியாணடு மிடும்பை யில *

யாதொரு பொருளையும் விரும்புதலும் வெறுத்தலும் இல்லாதவனது அடிகளை சேர்ந்தவர்க்கு எக்காலத்திலும் பிறவித் துன்பங்கள் உண்டாவனவல்ல என்பதாம்.

கய- ஒத்தவிடத்து நித்திரைகொள்

ஒத்தவிடத்து- மேடுபள்ள மில்லாமற் சமமானவிடத்திலே, நித்திரைகொள்-நீ படுத்துநித்திரைபண்ணு.

டு௰-ம்-அதி இடனறிதல் க ம்-செய்யுள்.

தொடங்கற்க வெவ்வினையு மெள்ளற்க முற்று *
மிடங்கண்ட பின் னல்லது *

அரசர் பலகவரை வெல்ல இடங்கண்டாலல்லது எத்தொழிலையுஞ் செய்யாதிருக்கக்கடவர் அவரை யிகழாதிருக்கக்கடவர் என்பதாம்.

கக ஓதாதார்க்கில்லை யுணர்வொடுமொழுக்கம்.

ஓதாதார்க்கு-நல்லநூலைப்படியாதவர்களுக்கு,உணர்வொடும் அறிவுடனே,ஒழுக்கம்-நல்லநடக்கையும், இல்லை- உண்டாகுதல் இல்லை

சக-ம் அதி-கல்லாமை-ச-ம் செய்யுள்.

கல்லாதா னொட்பங் கழியநன் றாயினுங் . *
கொள்ளா ரறிவுடை யார் *

கல்லாதவனது அறிவுடைமை யானது ஓரோவிடத்தே மிக நன்றாயிருப்பினும விவேகமுடையவர்கள் அதனை அறிவுடைமையாகக் கொள்ளார் என்பதாம்.



ஔவையார் அருளிச்செய்த
கொன்றைவேந்தன்
முற்றிற்று



